"*Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith.*"

"*Seek Truth wherever you can find it,*" *But,* "*Make your choice and stick to it till you reach the End.*"

ஸத்யம்வத,—**Speak the Truth.**

"**Hitch Your Wagon to a Star.**" "**To Thine Own Self be True.**"




அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம்தத்ஸத்.] உ [God is Love: Knowledge is Power. *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம் **16.**] **1908**-ஆு மேமீ [சஞ்சிகை **7**

The Viveka Chintamani Publishing Committee have, as good as their word, made satisfactory arrangements to issue the **Viveka Chintamani** regularly in future. The Printers will heartly co-operate with the Editor and expedite the work, making it possible for the **Viveka Chintamani** to appear punctually to a day. We now have to appeal to the patrons and subscribers of the **Viveka Chintamani** both on our behalf and on behalf of Mr. C.V. Swaminatha Iyer, to do their part of the duty, and help us by sending their subscriptions promptly without further delay. We trust this appeal will meet with their cordial response.

நமது சந்தாதாரர்களான நேசர்கள் அவரவர்கள் சந்தாத்தொகையை யனுப்பவதோடு புது சந்தாதாரர்களையும் சேர்த்தனுப்பி யுதவவேண்டுமோய் விவேகசிந்தாமணி கமிட்டியார் அவர்களை விநயமாய்க் கேட்டுக்கொள்ளுகிறார்கள்.

## LALITALAYA.

## †லலிதாலயம்.

இற்றைக்குச்சரியாக ஒரு வருஷத்திற்கு முன் இவன் ஒரு பரதேசியினிடம் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தான். அப்பொழுது அப்பியாசயோக முதிர்ச்சி நிலையிலுள்ள அந்தப்பரதேசி மௌனவிரதராயினும், "இந்தியாவுக்கு நல்லகாலம் வந்திருக்கிறது: வரவர அக்கிரமங்கள் இன்னும் அதிகரிக்கும். அதனால் கல்லல்களும் கலபைகளும், அதிகமுண்டாகும். ஆனாலும் எல்லாம் இந்தியாவுக்கு நன்மையாகவே முடியும். சீக்கிரத்தில் தானே இதனுண்மையை யுணரலாம்! இதைமட்டும் ஞாபகத்தி லிருத்திவைக்கவேண்டும்"—என்று சொல்லாமற் சொன்னார். "சொல்லாமற் சொல்லலும்" "கேளாமற் கேட்டலும்" தேஹமே சதமென்ற தப்புபாவனை தடித்துள்ள உலகத்தாருக்கு மயக்கந்தரும் வார்த்தைகளாக விருந்தாலும், தீக்ஷைபெற்று குருகடாக்ஷத்துக் கருகரானவர்களுக்கு இந்த சக்தி தானே வந்து வாய்க்கும். பஹிர்முகப்பார்வையே பார்வை யென்றிருப்பவர்களுக்கு அகமுகப்பார்வையின் அதிசயங்கள் அவ்வளவு தெளிவாக விளங்காதுதான். 'வியாதி வித்துக்கள்' என்று சொல்லும் Microbes, Bacilli முதலிய அணுப்பிரமாணமான நுட்பசிவன்கள் சாமான்யருக்குக் கண்ணுக்குத் தெரிகிறதில்லை. பூதக்கண்ணாடிபோன்ற கருவிகளின் சகாயத்தைக் கொண்டு சாஸ்திர விற்பன்னர்கள் அவற்றின் இயல்பை நன்றாக ஆராய்ந்தறிந்து சொல்கிறார்கள். அவ்வளவு நுட்பபுத்தியில்லாதவர்கள் அவர்கள் சொல்வதை நம்பித்தான் ஆகவேண்டியிருக்கிறது. அதுபோல

† 'லளிதா' என்றும் சொல்லலாம்.

பஹிர்முகப் பார்வையினல் அகக்கண் மழுங்கினவர்கள், அந்தர்முக அப்பியாசத்தினல் அகக்கண்படைத்தவர்கள் சொல்வதை முதலில் நம்பித்தான் ஆகவேண்டும். எதையும் நம்பி ஆராய்ந்தால்தான் உண்மை விளங்கும். உள்நம்பிக்கையென்னும் பக்தியிருந்தால் தான் உண்மை விசாரிக்க வேண்டுமென்கிற சிரத்தை யுண்டாகும். பக்தி சிரத்தையோடு கூடிய விசாரணையே உண்மையை உள்ளபடி விளக்கும். இதையெல்லாம் முறட்டுத்தனமாய் நிராகரித்துத் தள்ளி, "நான் கண்டதே காக்ஷி, கொண்டதே கோலம்" என்று இருக்கிற பிடிவாதக்காரர்களை நோக்கித் திருமூலதேவர் ஒரு திருமந்திரம் சொல்லியிருக்கிறர். அது இது:—

"முகத்திற் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு பார்ப்பதே ஆனந்தம்
மகட்குத்தாய் தன் மணளனேடாடிய
சுகத்தைச் செல்லென்றற்சொல்லுமாறெங்ஙனே!

ஆகையால் அனுபவ மில்லாதவர்களுக்கு என்னதான் சொல்லினும் ஏறுது. தனக்கு ஒன்று ஏறுமையால் அது தப்பு என்று தள்ளுவது மூடத்தனமாகும்.

தானறியாவொன்றை பக்தி சிரத்தையோடு அறிஞரை யடைந்து அவரையடுத்து விசாரஞ் செய்து உளவறிவாய் அவர் சொல்லும் புத்தியுக்திகளைச் சிந்தித்து குருவரப்பிரசாதத்தினல் அதை யறிந்துகொள்ள யத்தனிப்பதே விவேகத்துக்கு அடையாளம். இந்த விவேக மில்லாமற் போனல், மனிதன் ஞான சூன்னியனய் மிருகப்பிராய மாயிருந்துழலல் வேண்டுமே தவிர அவனுக்கு வேறு கதியில்லை. யோசிக்கும் சக்தியில்லாதவன் மனிதனல்லன். அவன் இரண்டுகால் பிராணியேயாம். மனத்தின் தொழில் 'நினைத்தல்—மறத்தல்.' 'சங்கல்பவிகற்ப' மென்பர் இதை. நினைப்பு-மறப்பின் முதிர்ப்பயன் விவேகம்: இந்த விவேகம் விசாரபுத்தியை யுண்டுபண்ணும். விசாரத்தின் முடிவு 'நித்யாநித்யவஸ்துவிவேகம்,'—அதாவது, இது நித்யம் இது அநித்யமென்று அறியும் அறிவு. இந்த அறிவுக்கு நல்லறிவு என்றுபேர். இதுதான் மனிதனை உபாஸனர்களைச் செய்கிறது. முதலில் பூஜிப்பவனுயிருந்து,பின்னர் பூஜ்ஜியதனுகிறன்; அதாவது, பூஜிக்கப்பட அருகனுகிறன். இப்படி அருகனுகு மவனையே அர்ஹத் என்று சொல்கிறது. இவன் எதையும் அகக்கண் கொண்டுபார்க்கும் சக்தி வாய்ந்தவனுகிறன். இப்படிப்பார்க்கப் பழகி, பார்க்கவேண்டியதை யெல்லாம் பார்த்துப்பார்த்து அலுத்துக் கடைசியில் "தெரிவானும் தெரிபொருளும் ஒன்றேயாகி" தான் திருஷ்டி மாத்திரமாய் நின்றல் அவன் இருஷி யென்றும் தீர்க்கதரிசி யென்றும் சொல்லப்படுகிறன். ஏனென்றல் தெரிசிக்கவேண்டியதை யெல்லாம் தெரிசித்து, தெரிசனமாத்திரமாய் மிஞ்சி நின்றபடியால் தீர்க்கதரிசி—"பூர்ணப்பார்வையுள்ளவன்" ஆகிறன். எல்லாவற்றையும் தெரிசித்து 'தன்னை' தெரிசிக்க மாட்டாதவன் பூர்ணப்பார்வையுள்ளவனுக மாட்டான்.

எல்லாவற்றையும் பார்க்கும் "முகக்கண்" அந்த முகத்தைப் பார்க்கமாட்டாமையால் தான் அதற்கு 'முகக்கண்—மூடக்கண்' என்கிறபேர் வந்தது. கண்ணுடியின் உதவியால் தன்முகத்தைத்தானே பார்த்துக்கொள்ளும் சக்தி முகக்கண்ணுக் கிருந்தாலும், கண்ணுடியின் ஸ்வபாவம்தெரிகிற வரையில் கண்ணுடியினல் பார்க்கும் முகத்தை தனக்கு அந்நியமாக நினைத்து மயங்கும் மயக்கம் நீங்காது. அந்த மயக்கம் கண்ணுடியின் ஸ்வபாவம் இன்னதென்று தெரிந்தவுடன் நீங்கிப்போகும். சுத்தஸ்படிகமான கண்ணுடியில் விழும் பார்வை அதில் விழுந்து திரும்பும்படி செய்யும் சக்தி அக்கண்ணுடிக் கிருக்கிறது என்று தெரிந்துகொண்டால், கண்ணுடியில்தெரியும் முகம் தனது முகத்தின் பிரதிபிம்பம் என்றும், கண்ணுக்கு கண்ணுடியில் விழுந்து திரும்புவதினல் பார்க்கும்முகம் தன் முகமேயானலும் எதிர்முகமாகத் (தலைகீழாக அல்லது இடம் வலம்மாறித்) தோற்றுகிறது என்கிற ஞானமுண்டாகிறது. இந்த ஞானம் உண்டாகி உறைக்கவும் கண்ணுடி மயக்கம் நீங்கிப் போகிறது. அர்ச்சுனன்,

த்ரௌபதி ஸ்வயம்வரத்தின் போது ஆகாசத்தில் கட்டிய மச்சயந்திரத்தை அதன் நிழலைப் பார்த்து இலக்கு வைத்து குறிதப்பாமல் அம்பு எய்யவேண்டுமென்று ஏற்படுத்திய நிபந்தனை, பெண்ணைக்கொள்ளும் மாப்பிள்ளை த்ரிபுடிமயக்கம் தீர்ந்தவனா யிருக்கவேண்டுமென்பதற்காக ஏற்படுத்தின பரீக்ஷை. காண்பான், காட்சி, காண்பொருள் ஆகிய இம்மூன்றுக்கும் 'த்ரிபுடி' என்று பேர். உலகஞானமெல்லாம் இந்த த்ரிபுடி சகிதமானதே. என்னதான் ஐயந்திரிபற வேத சாஸ்திரங்களையெல்லாம் கற்றாலும், த்ரிபுடிமயக்கம், "த்ரிபுடி தரிசனம்" என்று சொல்லும் சாக்ஷாத்காரம் உண்டானாலன்றி மற்றப்படி நீங்காது. இம்மயக்கம் நீங்கினவன் யாரோ அவனே யோகி யென்னப் படுவான். இதற்கு 'அறிவால் அறிவை யறிதல்' என்று சொல்லுகிறது. இப்படி அறிந்தவரே 'அறிவார்', 'ஞானி' 'இருஷி,' 'தீர்க்கதரிசி' 'த்ரிகாலஞானி' என்று சொல்லப்படுவார். இவர்கள் அறிந்த தெல்லாம் என்னவெனில்,—

திருமந்திரம்.

"அறிவார் பராசக்தி ஆனந்தமென்பார்
அறிவார் அறிவுருவாமவ ளென்பார்
அறிவார் கருமமவ ளிச்சை யென்பார்
அறிவார் பரனுமவளிடந்தானே."

லோக மாதாவாக வுள்ள பராசக்தி (பரதேவதாஸ்வரூபம்) 'ஆனந்த' மயமானது; அவள் உருவம் 'அறிவுரு'; அவளிச்சை 'கர்மா' வென்று சொல்லும் காரண காரிய ரூபமாயுள்ள மாறுவிதி; பரப்ரஹ்ம ஸ்வரூபத்தையும் கண்ணாடியில் முகம்போல் அவளிடத்தில் தானே கண்டறிவார்.

"இப்படிப்பட்ட அவளுடைய திவ்ய மங்கள தேஜோமயானந்த சௌந்தரிய ஸ்வரூபத்தை எவனொருவன் அறிந்தானந்திக்க வல்லானோ அவனே தாசன்; அவனே யோகி; அவனே ஞானி; அவனே பக்தன்; அவனே முக்தன்; அவனே சிரேஷ்டன்; அவனே மஹான். அப்படிப்பட்ட மஹான்கள் தற்காலம் இந்தியாவின் க்ஷேமத்தை நாடி, இடைவிடா துழைத்து வருகிறார்கள். அவர்கள் உழைப்பு வீண்போகாது. இப்பொழுதுண்டாயிருக்கும் பொதுஜன குதூஹலமும் பொதுமனக்கிளர்ச்சியும் அவர்களுடைய தபஸின் வலிமையால் உண்டானது.

"எழுதாப் பொத்தகத்தின் ஏட்டின் பொருளைத்
தெருளாதகன்னி தெளிந்திருந்தோத"—

என்ற திருமந்திரத்தின்படி அவர்கள் தேவியருள்பெற்றுழைத்து வருவதினால் இந்தியாவில் ஸ்வஜாதீய வுணர்ச்சியுண்டாகி வளர்ந்து வருகிறது.

"அகமுகத்திலிருந்து 'அவளிச்சை'யறிந்துநடக்கத்தெரியாமையால், மூடஜனங்கள் முகக்கண்கொண்டு பார்த்து வீண்வருத்தங்களுக்குட்பட்டுழல்கிறார்கள். விவேகசிந்தாமணி பிரசுரித்து அதனால் விவேக சம்பந்நரான நீர், அவிவேகிகளைப்போ லொழுகாது, அகமுகப் பார்வையிலிருந்து அம்பாளை உபாஸித்து அவள் திருவருட்படி நடந்து கொள்ளல்வேண்டும். அதுவே உமக்கு அழகு! அதுவே சரி! உலகவியவகாரம் எப்படிப்போனாலும் போகட்டும்! அதைப்பற்றி உமக்கு விசாரம் வேண்டாம்! அகமுகத்திலிருந்து அம்பாளை உபாசித்து அவளுடைய தெரிசனமும் அருட்பிரசாதமும் நித்யமாய்க் கிடைத்து நிரதசியானந்தத்தில் நிலைக்கிற வரையில் நீர் வேறெதையும் பற்றிக் கவலைப்படவேண்டாம்!" என்றுசொல்லி, "அம்பாள் உபாசனை அகத்தியம் செய்யவேண்டும்" என்று மிகவும் வற்புறுத்தினர்.

கைப்பொருளெல்லா மிழந்து கஷ்டதசையடைந்திருக்கும் நான் தேவியுபாசனை செய்ய அருகனாவேனோ வென்று சிறிது சந்தேகித்து மனக்கிலேசத்தோ டிருந்ததை நான் சொல்லாமலே யுணர்ந்துகொண்ட பரதேசியானவர் தீடீரென்று "நீர் ஒன்றுக்கும் யோசிக்கவேண்டாம்! பிள்ளை குட்டி, விசாரமெல்லா முயிக்கேன்! இந்தக்கஷ்டம் உமக்கு அம்பாள் அருளாலேயே வந்த தென்று நம்பும். இது ஒரு நன்மைக்கேயன்றி வேறல்ல. இந்த க்ஷணம்முதல் வேறொன்றையும்

பற்றி யோசிக்காமல் தேவியுபாசனை செய்யத்துவங்கல்வேண்டும். இஷ்டதேவதையைத் தியானித்துக்கொண்டுதேவியின் ஸ்வஸ்வரூபம் விளங்குவதோடு தாஸனுக்கு வேண்டிய கட்டளையெல்லாம் தானே நேர்நேரில் வந்து தெரிசனம் கொடுத்தாண்டு சதா கூடவிருந்து தன் திருவாக்கால் தானே இட்டருளல்வேண்டும். இது சித்தித்தாலன்றி வேறொன்று செய்யேன், மனதிலும் வேண்டேன், உள்ளத்திலும் உணரேன் என்று பிடிவாதமா யுட்கார்ந்து தபசு செய்யும்" என்று சொல்லி, ஸ்ரீ சிதம்பர ஸ்வாமிகள் சரித்திரத்தையும் உதாரணமாக வெடுத்துச் சொன்னார். அம்பாளை யெப்படி தியானிப்பதென்று கேட்டதற்கு, "இந்த ஆத்மா பிராமணத்திருமேனி யெடுத்திருப்பதாலும், ஆசாரிய மூர்த்தம் ஸ்ரீமத்பகவத்பாத சங்கராசாரிய ஸ்வாமிகளாயிருப்பதினாலேயும், அந்த அவதார புருஷர் உபாஸனை செய்த அம்மனையே உபாஸிக்க" வென்றார். அதற்கு ஒரு "உளவு நாமம்" வேண்டுமே யென்ன, "முகையம்மன்" என்று எழுதிக்காட்டிச் சும்மாவிருந்துவிட்டார்.

இந்தப்பிரஸ்தாபம் நடந்தமறுநாள் ஒரு அதிசயம் நடந்தது. அதை யிங்கு சொல்ல சாத்தியமில்லை. ஆனால் அந்தப் பரதேசி சொல்லியபடி பிள்ளை குட்டி விசாரமெல்லாம் அஃதோடு உள்ளத் துறுத்தாது நீங்கியது. இந்த நற்குறியைக்கொண்டு அம்பாளிடத்தில் திடபக்தி கொண்டவனுய் பரதேசி சொல்லாமற் சொல்லிய நாமத்தின் ஸ்வரூப தெரிசனம் சித்திக்க வேண்டுமென்று குருவைச் சிந்தித்துத் தபசு செய்து வந்த காலையில், ஓரிரவு அர்த்தராத்திரி வேளையில் குரு சந்நிதானத்தில் குரு தரிசனம் செய்து கொண்டிருக்கையில், முன்னர் திரிபுர ஸம்ஹார காலத்தில் கடவுள் திருக்கண்ணோக்கைக் கண்டு தேவி புன்முறுவல்கொள்ள, அப்புன்சிரிப்பினால் திரிபுரங்களும் எரிந்து சாம்பலானது போலும் புன்முறுவல் வலித்து குருமுகம் தோன்றி மறையக் கண்டேன். அப்புன்சிரிப்பு, முன்னர் திரிபுரஸம்ஹாரம் செய்ததுபோல, ஏழையேன் முச்சரீரங்களையும் எரித்துச் சாம்பலாக்கிய தென்னும் சங்கதி பின்னர் தெரியவந்தது. ஸ்ரீ சங்கர பகவான் திருவுருவப் படத்தைத் தியானித்து நிற்கையில் அவர் திருவாய்மலர்ந்தருளிய சௌந்தரியலஹரியில் தேவியின் "திருமுகப் புகழ்ச்சி" யென்னும் தலைப்பின் கீழ் அவருடைய மந்திரமொன்றைப் பின்வருமாறு மொழிபெயர்த்திருக்கக் கண்டேன்:—

"கூரெயிற்றினகவிதழுங் கொண்கர்விழி
வரிவண்டெங் குழற்படிந்த மதுகரத்தின்
குழாமுங் கூடிப்,
"பேரியற்கை மணம்பொதிந்து புன்மூரன்
முகையவிழப்
பிறழுமுன தருணமுக கமல மென்றால்,
"ஓரியற்கை வாடுமிதழ் பொறிவண்டே படிவதுமற்
றோரியற்கை செய்ற்கைமணம் போது செய்யும்
"நீரியற்கை மலர்க்கமல மிதற்குடைந்து
பங்கமுறல் நீதி
யென்பதியாரறியார் நிகரில் மாதே!"

மொட்டில்மலரைப்போலும், மலரில் வாசனையைப்போலும், "முகையம்மன்" என்று உளவறிவாய்ச் சொன்னதினுண்மை உள்ளபடி யுணர்ந்து கொண்டேன். கண்டேன் கண்டேன் காதலியைக் கண்டேன் என்று கண்ணும் கருத்தும் ஒன்றாய்க் களித்தது! ஸ்ரீ சங்கரபகவான் வாக்குச் சரியாயிருந்தது. அம்மன் முககமலத்துக்கு இயற்கைக் கமலம் தோற்றதே யென்பதற்கினி அத்தாக்ஷி வேண்டுவதில்லை.

அம்மன் முகதாமரையானது என்றும் வாட்டமுறாத பற்களாகிய உள்ளிதழ்களும், பொறியில்லனவாகிய † சிவபெருமானுடைய கண்களாகிய வரிவண்டுகளும், கூந்தல் வண்டுகளும் கொண்டு இயற்கை மணத்ததாய் எப்பொழுதும் விரிவதின்றிப் புன்முறுவல்அரும்பு (முகை) அவிழப் பிரகாசிக்கக் கண்டேன். "அம்மைதனைக் கண்டேன், அருள்பெற்றேன்,

† Compare:—'புலனற்றுப் பொறியிழந்தேன், பொன்னம்பலத்துட் போனேன், போனேனே!'—ஆனந்தத்தாய்மொழி.

மயல் தீர்ந்தேன்,'' என்று உள்ளுக்குள் பாடிக் குதித்தேன். இந்த முகதாமரைக்கு நீர்த்தாமரை யீடாகுமோ? அதற்கு இதழ்வாடும். அதுமலர்ந்தால் பொறிவண்டே படியுமன்றி, பொறியில்லாதவண்டு அதைச் சிந்தாது. அதன் மணம் நறுநீரினாலும் பருவத்தினாலும் வாய்ந்த செயற்கைமணமேயன்றிஇயற்கைமணம் தானாகவுள்ள வாசனை அதற்குக்கிடையாது. அன்றி, அது 'போதாகி' அதாவது பருவத்தே மட்டும் விரிதலுடையது. அம்மன் முகதாமரையோவென்றால், மொட்டவிழ்ந்து அலரினும்,வாடி இதழ் வீழாதுமொட்டவிழ்ந்தவண்ண மிருக்கும் புன்மூறுவலுடையது. அப்போதுதித்த சூரியனைப் போலும் பிரகாசிப்பது. கண்ணில்லாமற்காணும் சிவனது விழிப்பார்வையாகிய வரிவண்டு மொய்த்துள்ளது. இயற்கையாகவே வாசனை பொருந்தியது. இதற்கு அது தாழ்ந்ததென்று சொல்லக்கேட்பானேன்! இப்படிப்பட்ட முகநோக்குள்ள அம்பிகையின் முகதரிசனங்கண்டு எட்டுமாதமாகிறது. இந்த எட்டுமாதத்திலும் "அஷ்டாங்க ஹிருதயமான'' அவள் திருவுள்ளத்தை யுணரத் தவமிருந்து, அவள் ஹிருதய கமலத்திலிருந்து அவள் நகர்ப்புர மனைத்தும அவள் காட்டக்கண்டு அவள் திருவிளையாட்டுகளைச் சிந்தித்திருந்த ஏழை, அவள் திருவாணையைத் தலைமேற்கொண்டு அவள் திருவடிநீங்காத்தயவுறவேண்டி எல்லாம் அவள் பூஜையாகச் சகஜநிலையிலிருந் திழைக்கத் துணிந்தது; பின்னும், "தேஹோ தேவாலய'' என்ற சுருதிவசனத்தையொட்டியுள்ள 'அண்டத்தையொத்தது பிண்டம், பிண்டத்தையொத்தது வீடு' என்னும் மூதுரையையனுசரித்து,—அவள் பூஜை நடந்த நாள் முதல் கழிந்த பொழுதை அவளுக்கற்பணமாகச்சமர்ப்பித்து, இந்த ஆறுமாசங்களாக நமக்குநேர்ந்த இடையூறுகளை யெல்லாம் அவள் வரப்பிரஸாதமாகப் பரதேசி சொல்லியபடி பாவித்து, இந்தமே மாசமுதல், அவள் வரப்பிரசாதமாகக் கிடைத்த லலிதாலயத்திலிருந்து இந்த விவேகசிந்தாமணியை அவள் அருள்வழிநின்று தெருள்வழிப்பட்டு, மருள்வழி நீங்கி,மயக்கற எல்லா விஷயங்களையும்விளக்கி நடத்திவரத் தீர்மானித்துள்ளோம். "தேவியைக்கண்ணுறக்காணலுமாமோ?'' என்பாருக்கு நம் விடையென்னவென்றால் "ஆகும், ஆகாது!''என்பதே! இந்தவிடை நாம் புதிதாயளிப்பதன்று: அனுபவிகளெல்லாரும் ஆதிமுதலறைந்து வந்ததே யன்றிப் புதிதல்ல.

ஸ்ரீ பாபா பாரதியவர்கள், அமெரிக்காவில் அவர் ஸ்தாபித்துள்ள கிருஷ்ணாலயத்தில், "கடவுளைக் கண்ணால் காணலாமா?'' என்பதைப் பற்றிச் செய்ததோர் அருட்பிரவாகப் பிரசங்கத்தில் இதே பதிலைச் சொல்லியிருக்கிறார். "காண்டற்கெளியவன்—கண்ணுக் கெட்டாதவன்'' என்பது கடவுளுடைய அனந்தகுண கலியாண லக்ஷணங்களில் ஒன்று. கடவுளைச் சிந்திக்கும் மனதிற்குக் காணக் கிடைப்பவன். உபாதானத்தையே சிந்திக்கு மனதிற்கு உண்மையிற் காணக்கூடாதவன். "God is visible to the God-fed mind. God is invisible to the matter-fed mind'' என்று சொன்னார் பாபா பாரதி. "அவனருளே கண்ணாகக் காணினல்லால்'' காண்டற்கரியவன்—என்று நம் சமயாசாரியர்களில் அப்பர் ஸ்வாமிகளும் சொல்லியிருக்கிறார்கள்.

ஓம் லலிதாம்பாயைநமஃ

VOLUME XVI. No. 7.

## "என்றும் பதினாறு வயசு."

மார்க்கண்டேயருக்கு ஆதியில் கொடுத்த வயது 16-ம் கழிந்து போகவும், அவர் பெற்றோர்கள் தம் புத்திரனுக்கு வரக் காத்திருக்கும் முடிவை யுத்தேசித்துக் கவலைப்பட, அவர் கவலையை நீக்குவான், மார்க்கண்டன், 16-வயதாகாச் சிறுவனாயினும், சிவன்வழிப்பட்டுஅவன் திருவடிச்சரண் புகுந்தாருக்கு மரணமில்லையென்றுணர்ந்து, சிவபூஜை செய்யச் சென்றதும், அப்பொழுது யமன், தன் கடமையைச் செய்து முடிப்பான், குறித்த காலத்தில்

அவன் உயிரைக்கொள்ளவந்து நிற்கவும், மார்க்கண்டன் பூஜையிலிருந்து சிவனைத் துதித்து நிற்க, யமதர்மராஜன் நியமந் தப்பாது தன் தொழிலை நடத்த யத்தனிக்கவும், அச்சிறுவன் சிவலிங்கத்தை ஆலிங்கனஞ் செய்து கொண்டு சிவனைச் சரணடைய, அபயமென்றுருக்கு அஞ்சேலென்னும் நாதன், யமனை உதைத்து வென்று "காலகாலன்" என்கிற பேர் விளங்க நின்ற கதை யாவருக்கும் தெரியுமே. அதுபோல், இந்த விவேகசிந்தாமணி 16-வயது பெற்ற வனிதையாய்ப் பிறந்து வளர்ந்துவரப், பதினாறாம் பிராயத்தில் விதி வசமாய் வந்த ஆபத்தை விட்டு நீங்குவான் "விவேக சிந்தாமணி" யென்னும் தன் பேருக்குரியபடி, சிந்தாமணியேயாகி அம்மன் திருமேனியில் தரிக்கும் ஆபரணருகம் பெறத் தபசிருந்தாற்போலும், சென்ற அக்டோபர் மாசத்துச் சஞ்சிகைக்குப் பின் ஆறு மாசத்துச் சஞ்சிகைகளும் வியவகாரமற்ற தபசிகளின் அகநிலைபோல் அந்தர்முகமாயிருந் தொளிர்ந்து, இப்பொழுது நிஷ்டையிலிருந்து விழித்த தபசியேபோலும், யமனை வென்ற மார்க்கண்டன் பெற்ற வரப்பிரஸாதம் போலும், அம்மனது நித்ய யௌவனம்போலும் "என்றும்பதினாறாக விருக்க" இந்த மே மாசத்துச் சஞ்சிகையானது சென்ற அக்டோபர் மாசத்துச் சஞ்சிகையின் தொடர்பாய், 16-வது வாலியம் 7-வது சஞ்சிகையாகக் கணக்கிட்டு வெளிவந்திருக்கிறது. இதை நேசர்களெல்லா மங்கீகரித்து "என்றும் பதினாறுவயசு" என்கிற நித்திய வாழ்வு பெற்று விவேகசிந்தாமணி என்றென்றைக்கும் நீடித்திருக்குமாறு ஆதரவு புரிந்து, அச்சிந்தாமணியின் சிறப்பையும், அது சொல்லும் புத்திமதியையும், அத்யாத்ம ரஹஸியங்களையும், வியவஹாரிக நியாயங்களையும், சுத்த ஹிருதயத்தோடு படித்துத்தேறிப் பேரும் புகழும் குணமும் மணமும் பெற்று வாழ்வார்களென்று எல்லாம் வல்ல அம்பிகைபாதத்தைச் சிந்தித்துப் பிரார்த்திக்கிறோம். இந்த மாச முதல் விவேகசிந்தாமணி நூதனமாக வேறு ஆபீசில் அச்சிட்டு மாசந்தோறும் முன்போல் கிரமமாக வரும்படியான ஏற்பாடு செய்திருக்கிறோம். அச்சாபீஸாரோடு செய்துள்ள ஒப்பந்தத்தில் முக்கியமானதொன்று அந்தந்த மாசச் செலவை உடனுக்குடனே கட்டி விட வேண்டும், அச்சாபீஸார் காலந் தாழ்க்காது ஒழுங்காய்ப்பத்திரிகை வெளியாகும்படி வேலை நடத்த வேண்டு மென்ப தாகையால், கையொப்பக் காரர்கள் உடனே சந்தாவை யனுப்பி யாதரிக்கவேண்டும். பெரும்பாலாரும் கையொப்பத் தொகையை பாக்கி போட்டு வைத்துக் கொண்டிருந்தால், செவ்வனே நடைபெறாதாதலால், ஒவ்வொருவரும் பாக்கி சந்தாவையுடனே யனுப்பிவைக்க வேண்டுமாய்க் கோறுகிறோம். விஷயதானம் செய்து வந்த நண்பர்களும் இனிச்செய்ய விரும்பும் வித்வச்சிகாமணிகளும் தயவு கூர்ந்து அந்தந்த மாதம் 10-தேதிக்குள் அவர்களெழுதும் விஷயங்கள் நம் கைகவந்துசேரும்படி வந்தன பூர்வமாய்க் கேட்டுக்கொள்கிறோம், விவேக சிந்தாமணியின் விலாசம் இனி "லலிதாலயம், மைலாப்பூர்," என்பதை எல்லாரும் கவனிக்க வேண்டும்,

---

## BETRAYED!

## சதிமோசம்.

பொழுது விடிந்தால் புதுவருஷம் பிறக்கும் நாள். இரவு 10-மணியாகிவிட்டது. வீட்டு வேலைகளெல்லாம் செய்துவிட்டுப் பார்வதியம்மாள் படுக்கையில்வந்து உட்கார்ந்தாள். உட்கார்ந்தவள் படுக்கப்பார்த்தாள். ஆனால் அவளுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. வருஷம் 365-நாளும் கழிந்துபோய்விட்டது. பாதி ராத்திரியாய்விட்டால் வருஷமே போனதோடு போனதாகப் போய்விடும். இந்த வருஷம் பிறக்கும்பொழுது எவ்வளவு சந்தோஷமாக விருந்தது! என்ன என்ன வெல்லாம் எண்ணி மனப்பால் குடித்தோம்! இப்பொழுது நடந்துபோனதைப் பார்த்தால் எத்தனை விஷயங்கள் ஒட்டமும் கூட்டமுமாகவந்து மனதுநிறைய நெஞ்

சையடைக்கிறது! இந்த வருஷத்தில் நாம் பட்ட சுகமென்ன! கஷ்டமென்ன! வருத்தங்கள் எத்தனை! வில்லங்கங்கள் எத்தனை! அப்பா! எல்லாவற்றையும் நினைக்கும்பொழுது மனது நடுங்குகிறது. இவ்வளவையும் பட்டனுபவித்துத் தேறினதும் நாம் தானேயென்று நினைக்கும் பொழுது நடந்ததெல்லாம்மெய்யோ பொய்யோ, கனவோ நனவோ என்றிருக்கிறது! இருந்தாலும் கஷ்டங்கள் பட்டது பட்டதுதானே! நாமென்னவோ அனுபவித்தோம் தலைவிதியைப்போக்க! குழந்தைகள் இந்தக் கஷ்டங்களையெல்லாம் அனுபவிக்காதபடி தேவி கிருபைசெய்து காப்பாற்றவேண்டும். "தர்மாம்பிகே, தர்மஸமவர்த்தினி, த்ரிபுரசுந்தரீ, லோகநாயகி, அம்மணீ பரதேவதே சரணம்! குழந்தைகளை நீதான் காப்பாற்றவேண்டும்!" என்றுசொல்லிக்கொண்டே படுத்துக்கொண்டாள். அவள் வாய்விட்டுச் சொன்னவார்த்தைகளை மட்டும் எழுதினேமே யன்றி, அவள் உள்ளத்தில் உன்னியதை யெல்லாம் இங்கு எழுதவில்லை. பொழுது விடிந்தால் புதுவருஷம் பிறக்கப்போகிறது. விடியற் காலமே யெழுந்து வீட்டை சுத்தம்பண்ணி யலங்கரித்து குழந்தைகள் படுக்கையை விட்டெழுந்திருக்குமுன் வீடு லக்ஷ்மீகரமாக விளங்கும்படி செய்துவைத்து அடுப்புக் காரியங்களையும் பார்க்கவேண்டும். சமையலுக்கு நாழிகையானல் குழந்தைகள் பட்டினி தாங்காது!--என்று தனக்குள்தானே சொல்லிக்கொண்டு நித்திரை போனாள்.

வீட்டுக்குத் தேட்டாளனான பார்வதி நாதன் அவனுடைய லாபநஷ்டங்களையும் சுகதுக்கங்களையும் வரவு செலவுகளையும் பற்றிப் பலபல யோசனை செய்து, இந்த வருஷம் இப்படி முடிந்தது. அடுத்த வருஷம் நல்லதாக விருக்கட்டும்! பொழுது விடிந்தால் இந்த எண்ணங்களெல்லாம் பறந்துபோம் என்று படுக்கையில் தலையைச் சாய்த்தான். தலைசாய்த்து நித்திரை போனானே இல்லையோ, பழைய வருஷத்து அனுபவங்களெல்லாம் பட்டாளம் வகுத்தாற் போல அணிவகுத்து அவன் மனக்கண்முன் செல்லக் கண்டான். வியவகார வேளையில் இவை அவன் மனதுக்குப் பட்டதை விட, இப்பொழுது அவன் கண்ணுக்கு இவைகளெல்லாம் மிகவும் நிதரிசனமாகப் பட்டன. நாடகத்தில் நடிக்கும் வேஷதாரிகளைப்போல, அவனது அனுபவங்களெல்லாம் அவ்வவற்றிற்குரிய வேஷம் போட்டுக்கொண்டு அவன் முன் நடக்கவே, முதலில் சிறிது சித்தம் கலங்கினான். ஆனால் இவையெல்லாம் மனவுறக்கத்தில் விஷயானுபவங்கள் நடிக்கும் நடிப்பு என்று தெரிந்ததும், தான் சாக்ஷிமாத்திரமா யிருந்து எல்லாவற்றையும் பார்த்துவந்தான்.

இப்படி அவன்கண்முன் நடந்த நாடகக் கூத்தில் அவன் மனத்தைக்கவர்ந்து மயிர்க்குச்செடுக்கச் செய்தது "சதிமோசம்" என்னும் வேடதாரியின் ஆட்டமே. இந்த வேஷதாரியின்வேஷம் மிகவும் அற்புதமாயிருந்தது. "கழுத்தில் தாவடம் மனதில் அவகடம்" என்றொரு பழமொழி யுண்டு. அதுபோல, இவன் எண்ணமெல்லாம் மோசக்கருத்து நிறைந்தது. ரூபமோ சதிரூபத்தான். சதியென்றால் தேவிக்குச் சொல்கிறது. பதியென்று பகவானுக்கும் சதியென்று தேவிக்கும் பேர். இவர்கள் இருவருக்குமுள்ள உறவுக்கு "சதிபதி தர்மம்" என்று பேர். சதியென்றால் தன்னைக் கொடுத்தவனுக்குச் சொல்கிறது. தேவி பகவானோடு ஐக்கியமாக விரும்பி தன்னைக் கொடுத்துத் தன்மயமெல்லாம் அவன்மயமாகத், தன்பதியோடு ஒன்றுபட்டு இரண்டறக்கலந்து நிற்றதால் அவனுக்குச் சதியென்று பேர். அல்லது இன்னொரு விதமாகவும் அர்த்தம் செய்யலாமென்று கோணங்கிதாஸன் ஒருவன் குறிப்பாய் அறிவிக்கிறான். சத்என்றால் இருத்தல்-சாசுவதமாய் இருத்தல். தேவர்கள் தங்கள்வாழ்க்கை சாசுவதமானதென்று எண்ணி இறுமாந்திருந்ததை--"இ"--என்னும் தன் புன்சிரிப்பினால் அழித்தவள்—(திரிபுரசுந்தரியின் புன்சிரிப்பினால் திரிபுரமெரிந்துபோனதைக்குறிப்பிட அகடவிகடமாகஇப்

படி இட்டுக்கட்டி அர்த்தம் செய்ததாகக் கொள்ள வேண்டியது). அதன் அர்த்தம் எப்படியாஞலும் சரி: சதி என்பது தன்னைக் கொடுத்தவுக்கு அர்த்தமாக நிற்கும். தன்னைக் கொடுத்தவிடத்தில் அஹம் இருக்க விடமின்றி யழிந்துபோகுமாதலால் அகங்கார அழிவுக்குச் சதியென்கிற அர்த்தம் பொருந்தும்.

"நான் எனும் அகந்தை தீர்த்தென் மதியுண்ட மதியான மதிவதன வல்லியே!" யென்று தேவியைத் துதித்திருக்கிருர் தாயுமானவரும். அப்படிப்பட்டவள் மோசம் செய்வானேன்? "எண்ணிஞர்க்கெண்ணின்படி யிருந்தருளீயு மீசுவரியை" மோசக்காரி யென்று எப்படிச் சொல்லலாம்? உண்மையில் பார்க்கப்போனல் நம்மை மோசம் செய்வது நமது இந்திரியங்களேயன்றி, தேவியல்ல. இந்திரியங்கள் மனதைச் சேர்ந்தவை: மனத்திலிருந்துண்டானவை. மனம் அந்தக்கரணத்திலிருந்துண்டானது. ஆதலால் மனம் தான் வந்த வழியைப்பாராமல் பஹிர்முகமாகப் பார்க்கும்போது இந்திரியங்களில் பாய்ந்து அவற்றின் வழியாய் நோக்குகிறது. நோக்குங்கால் கண்டதைக் கண்டபடி யறிந்து, மனம் உண்மைபுணரவொட்டாமல் செய்கிறது. ஆனல் ஆத்மா தன்னையன்றி தனக்கயலான எதையும் உணராதாகையால் மனம், கிளிஞ்சவில் வெள்ளியைப்போல், ஜடப்பொருள்களில் சித்துள்ள ஆத்மாவைப் பார்க்கிறதாக ஆரோபித்து தன்னெண்ணமே யுருவாக அதைக் கண்டு மயங்கி பிரமிக்கிறது. ஆனல் இந்தப் பிரமை சாசுவதமாக நீடித்திருப்பதில்லை. அநித்தியமான பொருளில் நித்தியமான வஸ்துவைக் காண்பதாக ஆரோபிக்கு மனசு, அநித்தியப்பொருள் அதன் ஸ்வதர்மத்தை யொட்டி யழியும்போது, நித்தியப்பொருளைக் காணமல் தபிக்கிறது. தான் நித்தியமென்று நம்பினது அநித்தியமாக முடியவே, நித்தியாநித்திய அவஸ்து வேகமில்லாதமனது தான் ஆரோபத்தால் கண்டு மயங்கினதை அபவாத யுக்தியால்பொய்யென்று கண்டு தெளிகிறது. இந்த ஆரோபம், அபவாதம் இரண்டும் மயக்கம் தெளிவுக்குக் காரணமாயிருக்கிறது. தன் மனதிலுள்ள ஒன்றை அந்நிய வஸ்துவில் ஏற்றிக் காண்பது ஆரோபம். இது மயக்கத்திற்குக்காரணமாம். ஆரோபித்துக் கண்டதைப் பொய் யென்றறிந்து தன்பிழையறிதல் அபவாதம். இந்த ஆரோபயுக்தியும், அபவாத யுக்தியும் மனதின் விசேஷ யுக்திகள்! பொய்யை மெய் யென்று கண்டு மயங்கி, மெய்யென்று கருதியது தன் ஸ்வபாவத்தைக் காட்டிப் பொய்யாக நின்ற காலையில், நாம் நம்பி மோசம் போனேமென்றுணரும் உணர்வு அபவாத யுக்தியின் காரணமாக வுண்டாவது.

மனோதர்ம விதிகளை உள்ளபடி யுணராதார் இதன் உண்மையை யுள்ளபடியறியார்.

ஆனல் அனேகர்மோஹினி ரூபத்தையும், அது செய்யும் அழிம்புகளையும் பார்த்தும் கேட்டும் அறிந்திருக்கிருர்கள். இந்த மோஹினி ரூபமே சதிமோச ஸ்வரூபம். மோஹினிரூபம் தன்னழகால்புருஷனை மயக்கி, மயங்கின புருஷனுக்குத் தன்னைக் கொடுத்து இரக்ஷிக்காமல், அவன் சத்தைத் தான் உருஞ்சி அவனைத் திண்டாட்டத்தில் விடுவதைப் பார்த்திருக்கிறோம். அதுபோல மானிடர்களிலும் சதிமோசக்காரர்கள் இருக்கிருர்கள். சொல்வன்மையால் மெய்யைப் பொய்போலும், பொய்யை மெய் போலும் மயக்கிக்காட்டி நம்பினுரை எம்பிப் பிடித்து நட்டாற்றில் தள்ளிவிட்டு தான் மட்டும் கொழுத்துப் பிழைக்கும் மாயாப்பிசாசுகள்மானிடரூபத்திலும்இருக்கின்றன. இப்படிப்பட்ட மாயாவிகள் வலையில் சிக்கி யடிபட்டவராதலால், நமது கதாபுருஷன் சதிமோசப் பேயானது மோஹினி ரூபமாய்த் தோன்றி திடீரெனத் தன் கோலம் குலைத்து விகார ரூபமாய் நிற்பதைப் பன்முறைகண்டு வியந்து, இது யாரது! துஷ்டதேவதையோ, அல்லது இஷ்டசத்துருவோ, நம்மை யிப்படி ஏற்றி யிறக்கி இளக்காரம் காண்கிறதென்று மலைத்தார். வெகு நேரம் சிந்தித்தும் உண்மை விளங்காமையால், ஒரு சாதுவை யடுத்து தான் கண்

டதைச் சொல்லிக் காரணம் கேட்டார். சாதுவானவர், மெதுவாக அவர் முன்னனுபவத்தை விசாரித்துக்கொண்டு கனவுக்குத் தக்கபடி முன்னனுபவ மிருக்கக்கண்டு, "அப்பா, 'பட்டால்தெரியும் பார்ப்பானுக்கு' என்கிறது பழமொழியல்லவா? நீ உலகத்தில் பட்டனுபவித்தது தான் அப்பா, இப்பொழுது நீ அந்தர்முகமாகத் திரும்பியுள்ள வேளையில் தத்துவரூபமெடுத்துக் காட்டி நிற்கிறது. அந்த ரூபத்தைக்கண்டு மயங்காதே! மனசு அந்தர்முகப்பட்டிருக்கிற சமயத்தில் சித்திகளில் மனதைச் செலுத்தாமல், ஆத்ம விசாரத்தில் மனதைச் செலுத்தினால், இவைகளெல்லாம் கானல்ஜலம்போல் தோற்றி மறைந்து இருந்த இடம் தெரியாமற் போமென்று சொன்னார். அவர் பேச்சைக்கேட்டு அவன் ஆத்ம விசாரம் செய்ய அவனுக்கு சீக்கிரத்தில் தானே ஆத்ம தரிசனம் உண்டாகி, மோஹினி ரூபமெடுத்துக்காட்டிய பொய்யழகை ஆத்மாவுக்கு அதிஷ்டானமான பரதேவதை ஸ்வரூபத்தில் மெய்யாகக்கண்டு ஆனந்தித்திருந்தான். இப்படியாக சதிமோசத்தின் ஸ்வரூபம் அவனுக்கு சுதிமோக்ஷத்தை யுண்டுபண்ணக் காரணமாயிருந்தது. ஆகையால் நன்மையும் தீமையும் தான்றரவருமே யென்பது உண்மையாயிற்று.

மேலும் உண்மையை உள்ளபடியறிந்தவன் பொய்மையையும் அதுபோடும் வேஷங்களோடு கண்டு அவ்வேஷங் கலைத்துநிற்கும் நிலைமையையும் நிதர்சனமாய்க் கண்டுணர்ந்து தேறினுற்றான் அதனாலுண்டாகும் அநாதியாயுள்ள வாசனா மயக்கந்தீரும். இங்கே தத்துவ விளக்கமாய்மட்டும் கூறினதை லோகானுபவத்தில் ஒவ்வொருவரும் அவரவர் தம் அனுபவ ரீதியாய் ஆராய்ந்துணரின் சுகிர்தமாம்.

---



# AGRA.
## ஆக்ரா.

(172-வது பக்கத் தொடர்ச்சி)

Mothee Musjid:—முத்து மஸ்ஜீத். இந்த பிர்மாண்டமான கட்டட வெளிச்சுவரும் பட்டிப்பூர் கற்களால் கட்டப்பட்டது. உள் பாகமெல்லாம் வெள்ளைக்கற்களால் கட்டியிருக்கிறார்கள். கட்டடமானது தகுந்த மேட்டின் பேரில் கட்டியிருப்பதால் சுமார் 30-படிக்கட்டுகளை ஏறியே கட்டடத்திற்குள் நுழையவேண்டும். உயரமான கல்ஸ்தம்பங்கள் வைத்து கட்டப்பட்ட ஒரு அலங்காரமான மண்டபமும், மேல்புறத்தில் வாழைப்பூ வடிவமான கோபுரங்களும், அவற்றின்மேல் தங்கமுலாம் பூசிய கலசங்களும், அதிக விநோதமாய்க் காணப்படுவதுடன் எதிர்மேடையில் தண்ணீர்த் தொட்டிகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்த மஸ்ஜீதைப் பார்ப்பவர்கள் ஆனந்தமடையாமலிரார் என்பது திண்ணம்.

ஆக்பருடையசமாதி.(The Tomb of Akbar.) இது ஆக்ராவிலிருந்து ஆறுமைல் தூரத்திலுள்ள 'சிகந்தர்' என்னும் கிராமத்தை யடுத்து இரண்டு பர்லாங்கு அகலமும் அதே நீளமும் வைத்து கட்டப்பட்ட உன்னதமான கட்டடம். மேலே வைக்கப்பட்டிருக்கிற ஸ்தூபி, கோபுரம் இவைகளின் உயரம்உட்பட 130-அடி உயரமுள்ளதாய் பெரிய வண்டிகளும் யானைகளும் உள்ளே செல்லக்கூடிய வாயில்களையுடையதாய், பட்டிப்பூர் கற்களை வெளிப்புறத்திற்கு வைத்தும், வெள்ளை ஸ்படிகக்கற்களை உள்பாகத்திற்கு வைத்தும் கட்டப்பட்டது. இதன்மத்தியப் பிரதேசத்தில் ஆக்பர் பாதுஷாவின் சமாதியானது வெள்ளைஸ்படிகக்கற்களால் பூங்கொடி சித்திர அலங்காரங்கள் செய்து அமைக்கப்பட்டு, "உனது பெயர் 'விளங்கட்டும்'' என்னும் கருத்துள்ள பதங்கள் அரபி பாஷையில் செதுக்கப்பட்டிருக்கிறது. தவிர கட்டடத்தின் சுவர்களில் குரான் முதலியவைகளிலிருந்து பலவாக்கியங்களை வெள்ளை

ஸ்படிகக்கற்களில் செதுக்கி யிருக்கிறார்கள். இதேமாதிரி சமாதிமேல் மெத்தையின்பேரில் செய்து வெகு அலங்காரமாய் வைத்திருப்ப தால் அங்கிலேயர் முதலிய அந்நிய தேசத்தவர் கள் தாராளமாய் வந்து பார்த்துக்கொண்டு போகிறார்கள். அடிபாகத்திலுள்ள சமாதி, மேல்பாகத்திலிருந்து படிகளின் வழியாய்க் கீழேயிறங்கி சுற்றிப்பார்ப்பவர்களுக்கு ஒரு குகையில் கட்டப்பட்டதுபோலத் தோன்றும். இந்த சமாதியைச் சுற்றி அவர் பந்துக்களு டைய சமாதிகள் பல காணப்படுகின்றன.

டாஜ் மஹால் (Taj Mahal.) இந்த ஆச் சரியமான கட்டடம் யமுனாநதியின் வடகரை யில் தேவேந்திர விமானம்போல் கட்டப்பட்டி ருக்கிறது. இந்தக் கட்டடம் கட்டியிருக்கப் பட்ட பூமியானது 120-கஜ அகலமும் அதற்கு மூன்று மடங்கு அதாவது 360-கஜ நீளமுமுள் ளது. இந்த விஸ்தீரணமுள்ள இடத்தைச் சுற்றி, பத்துப்-பதினைந்துஅடி உயரமும் நான் கடி அகலமுமுள்ள மதிள்சுவர் கட்டப்பட்டிரு க்கிறது. முந்திய புறத்தில் பட்டிப்பூர் கற்களால் ஒருகோபுரத்துடன்கட்டப்பட்ட ஒரு பெரும் தலைவாயில் விளங்குகிறது. சமசதுரமானவிஸ் தீரணத்தில் பெரியவளைவுகள் வைத்தும், வெள்ளைப்பளிங்குக் கற்களால் 10அடி உய ரமுள்ள ஸ்திரீ ரூபமான இரண்டு பிம்பங்கள் செய்து சாய்ந்தவாக்கில், முன்சொன்ன வளை வுகளுக்குமேல் அமைத்தும், மேலேயுள்ள கோபுரத்திற்குச் செல்ல ஒருபுறத்தில் படி கள்அமைத்தும், கீழ்புறத்திலுள்ள ஒரு அறை யில் இந்த டாஜ் மஹால் சம்மந்தமான பிளான், பலவருஷங்களில் எடுக்கப்பட்ட 'போட்டோ' படங்கள், கட்டியவராகிய ஷாஜீஹான் பாது ஷா படம், மும்டாஜி படம் முதலிய பல சாமா ன்களைவைத்து 'டாஜ் மியூசியம்' என்று பெய ரிட்டிருக்கிறார்கள். இதற்குள் சற்று படித்த வர்களென்று தோற்றுகிறவர்களை மட்டும் விடு கிறார்கள். இந்த வாயிலைக் கடந்து உட்சென் றால், இரண்டு இரண்டு வரிசையாகசெல்லும்படி இரண்டடியகல முள்ள, கல்களமைத்து, பாதை யாகவும், இருபுறத்திலும்வரிசையாய் தண்ணீர்க்குழாய்களமைத்து, எப்பொழுதும் தண்ணீர் வாரி இறைத்த பாவனையாய் விழும்படி செய்து கீழே தண்ணீர்,தொட்டிகளில் தேங்கும்படி யாகவும், அத்தண்ணீர் இருபுறத்திலுமுள்ள சந்தனம்அகில் அசோகு, வாழை கமுகுமுத லிய மரங்களுக்கும் மல்லிகை இருவாக்ஷி, ஜாஜி முதலிய புஷ்பச் செடிகளுக்கும் பாயும்படி செய்திருக்கிறார்கள். இம்மாதிரி தண்ணீர்க் குழாய்களும், தொட்டிகளும் கல்பாதைகளும் இந்த வாயிலிலிருந்து வைக்கப்பட்டிருப்பதைத் தவிர டாஜ் மஹால் என்ற ஆச்சரியமான கட் டடத்திலிருந்தும் வைக்கப்பட்டு மத்தியில் வெள்ளைக் கற்களாலேயே செய்யபட்ட ஒரு மேடையும் அம்மேடையின் நடுவே, வெண் மை, சிவப்பு, மஞ்சள் முதலிய வர்ணமுள்ள மச்சங்கள் துள்ளிவிளையாடிக் கொண்டிருக்கிற ஒரு சிறிய தடாகமும்; அதற்கு நான்கு புற த்திலும் உட்காரத் தகுந்த ஆசனமேடைக ளும், இரவில் விளக்கு வைக்கத் தகுந்த லாந் தர் ஸ்தம்பங்களும் அமைக்கப் பட்டிருக்கின் றன.

இந்த மேடையிலிருந்து பார்த்தால் சுமார் 150-கஜ தூரத்தில் நாம் முன்கூறிய வாயிலும் அதற்கு எதிர்முகமாக 150 - கஜ தூரத்தில் டாஜ்மஹாலும் மற்ற இருபுறத்திலும் 50-கஜ தூரத்தில் மதிள் சுவரை யொட்டி இரண்டு 'மஸ்ஜீதுகள்' என்று அழைக்கப் படுகிற சித் திராலங்காரமான கட்டடங்களும் காணப்படு கின்றன. இவைகள் பட்டிப்பூர் மலைக் கற்களே யன்றி மற்றப்படியன்று. இம்மாதிரி சற்று பெரியதான இரண்டு கட்டடங்கள் டாஜ் மஹாலின் இரு புறத்திலும் மதிள் சுவரை யொட்டிக் கட்டப்பட்டிருக்கிறது. இக்கட்ட டங்களுக்கு நடுநாயகமாக விளங்கும் டாஜ் மஹாலானது யமுனை நதியை நோக்கிய பாவ னையாய் சுமார் 50, 60, அடி ஆழத்திலிருந்து பிர்மாண்டமான பலகைக் கற்களாலேயே அஸ்திவாரம் போட்டு தரை மட்டத்திற்கு மேல் 15 அடி உயரம் கட்டடம் கட்டி அதன்

மேல் வெள்ளை ஸ்படிகக் கற்களையே பரப்பி சுமார் 200-அடி அகலமும் அதே அடி நீளமும் வைத்து மேடை செய்து, நான்கு புரத்திலும் 137-அடி உயரமுள்ள நான்கு மினரேட்ஸ்களென்னும் நீண்ட கோபுரங்கள் வெள்ளைஸ்படிகக் கற்களாலேயே கட்டி, உள்ளே வளைந்து சுற்றிச் செல்லும் படிகளமைத்து, மேல் உச்சியில் எட்டு ஸ்படிகத் தூண்களால்வாழைப்பூ மாதிரி செய்த கோபுரங்களும் அவற்றின் மேல் பொன்முலாமிட்ட கலசங்களும் பிரகாசிக்கின்றன. இந்த மினரெட்ஸ்களுக்குள் வளைவுப்படிகள்வைத்து, போதுமான வெளிச்சம் வரும்படி அங்கங்கே பலகணிகள் வைத்திருக்கிறபடியால் யாவரும் பயமின்றி ஏறி டாஜ்மஹாலின் அழகையும், யமுனைநதியின் கம்பீரத்தையும், ஆக்ரா பட்டணத்தின் தோற்றத்தையும், கோட்டையின் அமைப்பையும் கண்டு ஆநந்தமடையலாம்.

இந்த நான்கு கோபுரங்களுக்கிடையில் 75-அடி நீளமும் 75அடி அகலமும், 250-அடி உயரமும் கொண்டதாய், சுற்றியும் பன்னிரண்டு சிறிய ஸ்தூபிகளும், அவைகளுக்கு மத்தியில் நான்கு பெரிய வாழைப்பூ வடிவமான கோபுரங்களும், அவைகளுக்கு மத்தியில் ஆகாயத்தை யளாவும்படியாக பிரமாண்டமான வளைவுகளுடன் கூடிய கோபுரமும், அந்த கோபுறங்களின்பேரில் பொன்முலாம்பூசிய கலசங்கள் ஒன்றுக்குமேலொன்றாய்ப் பிரகாசிக்க, அந்த அர்த்தசந்திரனைப் போல் பிரகாசிக்கிற கோப்ர உருண்டைகளின்பேரில் வரிசையாக பச்சை, சிவப்பு, நீலம் முதலிய நிறங்களோடு கூடிய தீபங்கள் ஏற்றியதுபோல், பதிப்பிக்கப்பட்ட கற்கள் ஜ்வலிக்க, சிற்ப சாஸ்திரமே சிரித்து 'சபாஷ்' என்று சொல்லும்படியாக உள்ளும் மேலும் ஒரே மாதிரியாக ஸ்படிகக் கற்களைக் கொண்டே, ஒட்டு இன்ன இடத்தில் என்பது தெரியாமலும், சாரங்கட்டியவிடம் தெரியாமலும், சுண்ணாம்பு, காரை மணல் முதலியவைகளை உபயோகப்படுத்தாமலும் கதவுகளுக் கன்றி மற்றவைகளுக்கு மரமென்றதை மருந்துக்கும் சேர்க்காமலும், வேண்டிய ஒவ்வொரு தூண், சட்டம், நிலை, பலகணிமுகப்பு, முதலிய பாகங்களில் வெள்ளை ஸ்படிகக்கற்களையே செதுக்கி பச்சை, சிவப்பு, நீலம், மஞ்சள் முதலிய கற்களைப்பதித்து புஷ்பங்களோடு கூடிய கொடிகள் படர்ந்தமாதிரி செய்திருப்பதையும், ஸ்படிகக்கற்களையே குடைந்து செடி கொடி யலங்காரங்கள் துளைச்சலினாலேயே யுண்டாகும்படி செய்திருப்பதையும், பார்த்தால் விஸ்வகர்மாவே வந்து கட்டிச் சென்றனரோவென்று கூறும்படி தோற்றுகின்றது. உள்பாகம் பக்கத்திற்கு மூன்று அறை வீதம் எட்டு அறைகளோடும் மத்தியில் ஷாஜீஹான் பாதுஷாவுடையவும் அவர் அன்புக்குகந்த 'மும்டாஜ்' என்னும் மனைவியுடையவும் சமாதிகளின் மேடைகள்அபூர்வமான ஸ்படிகக்கற்களால்செய்து சுற்றியும் சித்திரப்பூக்கொடி வேலைகள் செய்த வெள்ளைக் கற்களினாலேயே கைபிடி சுவர் அமைத்திருக்கிறது. சமாதிக் கற்கள் மேலும்சித்திர அலங்காரமாய் விலையுயர்ந்த கற்களினாலேயே பூங்கொடிவேலைகள் செய்திருக்கிறார்கள். இவை பார்வைக்கு அலங்காரமாகவிருந்தாலும் குரான் முதலிய புஸ்தகங்களிலிருந்து எடுத்தெழுதிய அக்ஷரங்கள் என்பதாகவும் கூறப்படுகிறது. 'மும்டாஜ்' சமாதியை விட ஷாஜீஹான் சமாதி சற்று உயரத்தில் குறைந்தும், சித்திரவேலைப்பாடுகளில் கொஞ்சம் தாழ்ந்ததாகவே காணப்படுகிறது. இந்த சமாதியை, இதைச்சுற்றி யுள்ள எட்டு அறைகளிலிருந்தும் பார்க்கும்படியாக வெகு சாதுரியமாய் பலவர்ணக் கண்ணாடிகளமைத்த ஜன்னல்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. மேல்பாகத்தில் கோபுரமாக செய்து வளைக்கப்பட்டதால் நேர்ந்த உள்பக்கத்து வளைவுகளுக்கும் எவ்விதமாகவோ பல சித்திரங்களுண்டாகும் படியாக வேலைசெய்திருக்கிறார்கள். 200-அடி உயரமுள்ள இந்த கல்வளைவுகளில் சித்திர அலங்காரம் செய்திருப்பதைப் பார்க்க அற்புதமாகத்தோற்றுகிறது.

இந்த சமாதியின் அடிதளத்தில் உண்மையாக சமாதிசெய்யப்பட்ட இடமுண்டு. மேலே செய்திருக்கிற மாதிரியாகவே மேடைகள் செய்து ஸ்படிகக்கற்களாலேயே மூடியிருக்கிருர்கள். இந்த அடிதளத்திற்கு சென்று பார்க்க இஷ்டப்படுகிறவர்களை மட்டும் ஒரு லாந்தர் வெளிச்சத்துடன் கூட்டிக்கொண்டுபோய்க் காட்டுகிருர்கள். இந்த பாகமும் வெள்ளை ஸ்படிகக் கற்களாலேயே கட்டப்பட்டு அதிக பரிசுத்தமாகவே வைக்கப்பட்டிருக்கிறது. இந்த சமாதிகளும் 'டாஜ் மஹால்' என்ற ஆச்சரியமானகட்டடமும், மைனரெட்ஸ்கள்என்ற கம்பங்களும் பல்லாயிரக்கணக்கான ஸ்படிகக்கற்களால் கட்டபட்டதாயிருந்தாலும், அக்கற்களை அறுத்து நயப்படுத்திய விதமும், குடையவேண்டிய இடங்களில் குடைந்தெடுத்த விதமும், பொறுத்துகள் தெரியாமல் பொறுத்தப்பட்ட விதமும், அக்கற்களின்பேரில் கொடிகளும் புஷ்பங்களும் அமையு சித்திர அலங்கார விநோதமாக, பலவர்ணக் கற்களைப் பதித்த மாதிரியும், உள்ளும் புறமும் ஒரேமாதிரியாக அமையும்படி கட்டியிருக்கிற திறமையையும் என்னவென்று சொல்வது! யோஜித்தால் மூளை சிதறுமேயன்றி புத்திக்கு ஒன்றும் எட்டுகிறதில்லை. அம்மாதிரி 10-அடி நீளமும் அகலமுமுள்ள ஒரு கட்டடம் கட்டுவதென்றுலும் இலக்ஷக் கணக்கான திரவியமும், அனேக வருஷ உழைப்பும் வேண்டுமே!

இந்த கட்டடத்தை ஷாஜீஹான் தனது அன்புள்ள மனைவி ஜெகத்ஜோதி என்ற மாதின் வேண்டுகொள்கைக் கிசைந்து இருபத்திரண்டு வருஷகாலம் இரவு பகல் என்ற வித்தியாசமின்றி, இருபது லக்ஷம் ஜனங்களை வேலைக்கு நியமித்து இருபது கோடி பூவராகளைச் செலவழித்து, தனது இதரவேலைகளை தகுந்தவர்களைப் பார்க்கும்படி ஒப்பிவித்து, தானே கண்ணும் கருத்துமாயிருந்து செய்து வைத்ததாகத் தெரியவருகிறது. இதைக் கட்டுவதற்கு முன் துர்க்கிஸ்தானம், கான்ஸ்டாண்டிநேபில், முதலிய விடங்களிலிருந்தும் பல விதமான பிளான்களை வரவழைத்துப் பார்த்ததாகவும், கடைசியில் இத்தேச சிற்பியொருவரால் தயார் செய்யப்பட்ட பிளான் பிரகாரமே இந்துக்களைக் கொண்டே இதைக் கட்டியதாகவும் தெரியவருகிறது. உலகத்திலுள்ள ஏழு ஆச்சரியங்களில் ஒன்று என்பதாகக் கொண்டாடப்படுகிற இந்த அற்புதமான கட்டடத்தை நேரில் கண்டவர்களுக்கு அதன் அருமை பெருமை தெரியுமேயன்றி ஒரு வியாசத்தில் எழுதுவது முடியாத காரியமே. இந்த டாஜ் கட்டடத்திற்கு வடபுறத்திலும் தென்புறத்திலும் இப்பொழுது சிங்காரவனம் செய்து அநேக செடிகொடிகளையும் பல விருக்ஷங்களையும் வைத்து பயிர் செய்திருக்கிருர்கள். தவிர இந்த டாஜ்மஹாலையடுத்து பூர்வத்தில் கட்டப்பட்ட பலவீடுகளும், மாளிகைகளும் காணப்படுகின்றன. இவைகளெல்லாம் பட்டிப்பூர் கற்களால் கட்டப்பட்டவைகளே. மேற்கூறிய சிங்காரவனத்தில் நமது காருண்ணிய விக்டோரியா சக்கிரவர்த்தியின் சிலையொன்று நூதனமாய் நாட்டியிருக்கிருர்கள்: தவிர இந்த சிங்காரவனத்திற்குள் பந்தாடும் மேடைகளும் சில போடப்பட்டிருக்கின்றன.

இதையன்றி யமுனை நதிக்கு அக்கரையில் இராமபாக் என்பதாக ஒரு சிங்காரவனமிருக்கிறது. இது முன்னொரு காலத்தில் அதிக சிரேஷ்டமான சிங்காரவனமாயிருந்துஇப்பொழுது சீர்கெட்ட ஸ்திதியிலிருக்கிறது. இந்தத் தோட்டத்தைப் பார்க்கச் செல்லுகிறவர்கள் யமுனையாற்று பாலத்தைக் கடந்து செல்லல் வேண்டும்.

ஜிம்மாமசீத்:—இதுவும் பட்டிப்பூர்கற்களால் கட்டப்பட்ட பெரிய கட்டடம். ஆக்ரா கோட்டை--ரயில்ஸ்டேஷனை யடுத்திருக்கிறது. இந்த மசீத்தின் மல்பாகத்தில் சில ஸ்தூபிகள் அதிக உயரமாய் கட்டப்பட்டிருப்பதுடன் மேல்பாகத்தில் ஆறுகால் முண்டபம்போலவும் எட்டுக்கால் மண்டபம்போலவும் பல கல்மண்டபங்கள் செய்து வரிசையாய் அமைத்திருக்

கிறார்கள். இவைகள் பார்வைக்கு அதிக அந்தமானவைகள். உள்பாகத்தில் சுமார் ஆயிரம்பேர் உட்காரக்கூடிய ஒரு கூடம்(Hall)இருக்கிறது. இப்பொழுது இந்தக் கட்டடத்தின் சில பாகங்கள் இடிந்து கிடக்கின்றன.

இவைகளன்றி பட்டிப்பூர் என்ற கிராமத்தில் ஆக்பர் பாதுஷா ஒரு அழகான மஸ்ஜீயதும், தமது மூன்று மனைவிகளும் சுகமாய் வசிக்க ஒரு அலங்காரமான அரண்மனையும் கட்டியிருக்கின்றனர். இவைகளும் பார்க்கத் தக்கவைகளே. இந்த கிராமம் ஆக்ராபட்டணத்திலிருந்து 16மைல் தூரத்திலிருக்கிறது. இது ஆக்பருக்கு அதிக பிரியமானவிடமென்பதாகத் தெரியவருகிறது.

மேற்கூறிய கட்டடங்கள் ஒவ்வொன்றையும் யாதொரு கட்டணமுமின்றிப் போய்ப்பார்க்கலாம். கோட்டைக்குள் சென்று பார்க்கப் பிரியமுள்ளவர்கள் ஆள் 1-க்கு ஒரு அணு வீதம் கொடுத்து டிக்கட்டுகள் பெறவேண்டும். இதற்கு முந்திய தினத்திலேயே விண்ணப்பம் செய்யவேண்டும். இந்த பூர்வீகமான கட்டடங்களின்றி நமது அங்கிலேய கவர்ன்மெண்டார் காலத்தில் கட்டப்பட்ட கட்டடங்களில் பார்க்கத்தக்கவைகளும் சிலவுள. அவைகளில் முக்கியமானவை 'மெட்காப் ஞாபக சின்னம்' என்ற கட்டடம், ஆக்ராகாலேஜ், லெப்டினெண்ட்டு கவர்னர் மாளிகை, 'பாங்கி' முதலியவைகளே. இதில் மெட்காப் ஞாபக சின்னம், சர்க்கஸ், ஆட்டம், பிரசங்கம் முதலியவைகள் செய்யத் தகுந்த பெரிய ஹாலுடன் கூடிய கட்டடம்.

யாம் இந்நகரத்திலுள்ள டாஜ்மஹாலைப் பார்க்க வேண்டுமென்ற பேரவாவினல் இந்நகரையடைந்து மூன்று நாள் தினமும் மேற்படி டாஜ்ஜைப் பார்த்தும் திருப்தியடையாமல் மறுபடியும் இரண்டு நாள் தங்கி ஒரு நாள் இரவு நிலா வெளிச்சத்திலும் மற்றொரு நாள் யமுனையின் எதிர்க்கரை சென்று பார்த்தும், திருப்தியடையாமல் மறுபடியும் ஒரு தடவை சென்று பார்த்து திரும்பினேம்.

இனி வடமதுரையைப்பற்றி எழுதுவோம்.

T. C. வேங்கட்டரமணையர்.

---

## "FREE FROM BONDS."

(THE AUTOBIOGRAPHY OF A TALUQ GUMASTAH)

## * அவிழ்த்துவிட்ட கழுதை.

(177-வது பக்கத்தொடர்ச்சி)

திருச்சினப்பள்ளியில் நான் பள்ளிக்கூடத்தில் சேர்ந்த ஆரம்பத்தில் சில திருவிளையாடல்கள் நடந்தன. அவற்றை இங்கே சற்றுச் சுருக்கமாய்ச் சொல்லிவிட்டு இந்த பாகத்தை முடித்து விடுகிறேன். பள்ளிக் கூடத்திலேயே சாப்பிட்டுக்கொண்டு படிக்கிற பிள்ளைகள் 16 வயதுக் குட்பட்டவர்களாயிருந்தால் அவர்களை ஒரு உபாத்தியாயர் வசத்திலாவது அல்லது பி. ஏ. வகுப்பு மாணுக்கர்களிலொருவன் வசத்திலாவது ஒப்புவித்து அவர்களுடைய படிப்பு முதலிய சௌகரியங்களை மேற்பார்வையிட்டுக் கவனித்துக்கொள்ளும்படி பெரிய உபாத்தியாயர் ஏற்பாடு செய்வது வழக்கம். அதே மாதிரி என்னை நடராஜன் என்றொரு பி. ஏ. வகுப்பு மாணுக்கன் வசம் ஒப்புவித்தார். நடராஜனுக்கு மணியன் என்று ஒரு தம்பியும் அதே பள்ளிக்கூடத்தில் என் வகுப்பிலேயே படித்துக் கொண்டிருந்தமையால் நாங்கள் மூன்று பெயரும் ஒரு பெரிய அறை வாடகைக்கு வாங்கி அதில் ஒன்ருய்க் கூடியிருந்தோம். இரவில் நடராஜன் தனியே ஒரு விளக்கு வைத்துக்கொண்டு ஒரு மூலையில் சந்தடி செய்யாமல் படித்துக்கொண்டிருப்பான். நானும் மணியனும் சிற்சில சமயம் ராமுடு என்று என் வகுப்பில் படித்துக்கொண்டிருந்த இன்னொரு பையனுமாக இன்னொரு மூலையில் வெண்கலக் கடையில் யானை புகுந்

* தன்னை யறிந்து தன் தொழிலில் பிரவேசிக்கும் மனோதர்ம சக்தி தடை யறியாது.

ததுபோல் படித்துக்கொண்டிருப்போம். நாங்கள் போடும் கூச்சலில் நடராஜன் எப்படி படித்தானோ என்று எனக்கிப்பொழுது ஆச்சரியமாயிருக்கிறது. எனக்குக் கூச்சலில் படிப்பு ஒடாது. ஆதலால் நானும் விசேஷமாக நடராஜன் விளக்கில் தனியே போய் மௌனமாய்ப் படித்துக்கொண்டிருப்பேன். நான் பக்கத்திலிருக்கும்போதே கூச்சலிட்டுக் கொண்டிருக்கும் மற்ற இருவரும் நான் அப்பால் போய் விட்டால் படிப்பை அடியோடே நிறுத்தி விட்டு இன்னும் அகப்பட்ட பேர்களைச் சேர்த்துக்கொண்டு வம்பு பேச ஆரம்பிப்பார்கள். மணியன், அண்ணனுக்குப் பயந்த தம்பியல்ல. நடராஜன் என்ன சொன்ன போதிலும் கேட்கமாட்டான். தனக்காக இஷ்டப்பட்ட பொழுதுதான் படிப்பான். மற்ற வேளைகளில் ஊர் சுற்றுவான். காவேரியில் நீந்துவான். குஸ்தி தெரியாத பிள்ளைகளுக்கு குஸ்தி சொல்லிக்கொடுப்பான். மற்றப் பிள்ளைகள் இருவர் யாராவது சண்டை போட்டால் இளைத்தவன் கக்ஷியைத் தானெடுத்துக் கொண்டு சண்டை போடுவான். ராமுடு இவ்வளவு வெளிப்படையாக தன் துஷ்டத் தனத்தைக் காண்பிக்க மாட்டான். அவன் பார்வைக்கு சாதுபோலிருந்துகொண்டு கீழ்வெட்டாகச் செய்யும் விஷமத்துக்குக் கணக்கு வழக்கில்லை. அதிகமாகப் பேசமாட்டான். பேசினல் கொல்லென்று சிரிக்கும்படி ஒரு வார்த்தை சொல்லுவான். தான் மட்டும் சிரிக்கமாட்டான். பள்ளிக்கூடத்தில் வாத்தியாருக்குப் பின்னல் மணியனும் ராமுடுவுமாக ஒரு தனிப்பலகையில் உட்கார்ந்து கொண்டிருப்பார்கள். வாத்தியார் பிள்ளைகளைக் கேள்வி கேட்கும்போதே அவர் கையிலிருக்கும் புஸ்தகத்தைப் பின்னலிருந்தபடியே பார்த்து பதில் தெரிந்துகொண்டு தங்களைக் கேட்கும்போது கொஞ்சங்கூட யோஜிக்காமல் ராத்திரியே வீட்டில் படித்தவர்கள்போல் பதில் சொல்லிவிடுவார்கள். சில சமயம் ராமுடு வாத்தியார் தலைப்பாகை நுனியைப் பின்னலிருந்தபடியே அவிழ்த்துவிட, அது அவர் பேசுகையில் தலையசைவதனல் மெதுவாய் முற்றிலும் அவிழ்ந்து கழுத்தில் சுற்றிக்கொள்ளும். இதை எதிரே இருந்து பார்த்துக்கொண்டிருக்கும் மற்றப் பிள்ளைகளுக்குச் சிரிப்பு வந்தும் வாத்தியாருக்கும் ராமுடுவுக்கும் பயந்து சிரிக்கமாட்டாமல் திணறுவார்கள்.

நடராஜனோடு பழகினதில் எனக்கு இங்கிலீஷ்கவிகளிடத்திலும் நூலாசிரியரிடத்தும் பக்ஷபாதமுண்டாயிற்று. அவன் நல்ல கவிசிரேஷ்டர்கள் ஒருவரையும் விடாது படித்திருந்தான். தமிழிலும் அப்படியே வித்வானயிருந்தான். படிப்பில் ஆவலுள்ள பிள்ளைகள் தங்கள் வாத்தியாரிடத்தில் கேட்டுத் தெளியாத சந்தேகத்தை நடராஜனைக்கேட்டுத் தெரிந்துகொள்ளுவார்கள். அப்படியே சங்கீதத்திலும் அவனுக்குக் கொஞ்சம் பரிச்சயமுண்டு. சாயந்திரம் அஸ்தமிக்கவிட்டு 8-மணிக்கு சாப்பாட்டுக்குப் போகிறவரையில் காவேரிக்கரையில் உட்கார்ந்து பாடிக்கொண் டிருப்பான். 9-மணிமுதல் 10-மணிவரையில்தான் இரவில் படிப்பான். விடிந்து 6-மணிவரையில் தூங்குவான். காலையில் காவேரிக்குப்போய் ஸ்நானம் செய்துவர எட்டுமணியாகும். எட்டுமணிமுதல் 9-மணிவரையில் தான் காலையில் படிப்பான். எல்லாவகுப்பிலும் முதல் இனம் அவனுக்குத்தான். ஆனல் கர்வம் பெருமையொன்றுமில்லாமல் எல்லாவிதப் பிள்ளைகளோடும் எல்லாவகுப்புப் பிள்ளைகளோடும் சரிசமானமாய்க் கலந்து நடப்பான். மற்றப் பிள்ளைகளின் சந்தேகங்களைத் தீர்ப்பதற்கே தான் இவன் பொழுது முழுவதும் செலவழிந்துவிடும். நான் வீட்டிலேயே கொஞ்சம் ஸம்ஸ்கிருதம் படித்திருப்பதை யறிந்து, தனக்கும் ஸம்ஸ்கிருத பாஷை சொல்லிக்கொடுக்கும்படி என்னைக் கேட்டுக்கொண்டான். நான் ஆறு வருஷமாகக் கற்றதை அவன் ஆறுமாதத்தில் கற்றுக்கொண்டான். அவனிடத்தில் நான் கற்றுக்கொண்ட இங்கிலீஷ்படிப்பைப் பார்

த்து என்வாத்தியார் "உனக்கு இங்கிலீஷில் இருக்கப்பட்ட ஞானம் கணக்கிலுமிருந்தால் இன்றையதினம் பி. ஏ. பரீக்ஷை கொடுக்கலாம்" என்று மெச்சிக்கொண்டார். ஆனால் அதே நடராஜனிடத்தில் நான் கூடியமட்டும் வஞ்சனையில்லாமல் கற்றுக்கொண்டும் கணக்குமட்டும் என் மூளையில் நுழையவில்லை.

நான் திருச்சினாப்பள்ளிக்கு வந்த உடனே நடராஜனோடு குடியிருக்கப் போகிறதை அறிந்து 'மணியன் என்னைப்பள்ளிக்கூடத்துவாசலில்கண்டு என்மடியைப் பிடித்துக்கொண்டு "அடே நீ எந்த ஊர்? உன் பெயர் என்ன? உனக்கென்ன வயது?" என்று கேட்டான். எனக்கு அவன் நடராஜனுடைய தம்பி என்று தெரியாது. பின்னால் வந்துகொண்டிருந்த நடராஜனும் நான் பதில் சொல்லுகிறபடி சொல்லட்டுமென்று சும்மா இருந்து விட்டான். என்னைச்சுற்றி எல்லாப் பிள்ளைகளும் கும்பல் கூடினார்கள். நடராஜனும் பக்கத்தில் வந்து நின்றான். அவனைக்கண்டதும் என் நடுக்கமும் பயமும் நீங்கிக் கொஞ்சம் பதில் சொல்ல தைரியமுண்டாயிற்று.

"என் பெயர் தா-கு-. நான் கோயம்பத்தூர் ஜில்லா, ஐயா." என்றேன்.

"சே! என்னை 'ஐயா' என்று கூப்பிடாதே! உன் வயது என்ன?"

"பதின்மூன்று." "பாடத்தெரியுமா?"

"தெரியாது." "எப்படியும் பள்ளிக்கூடம் சாத்தி ஊருக்குப்போகும்போது நீ பாடித்தான் ஆகவேண்டும், இல்லா விட்டால் பெண்டாட்டி பெயரைச் சொல்லவேண்டும். இல்லா விட்டால் யார்விடப்போகிறார்கள்?" என்று முடித்தான். அது முதல் மணியன்தான் முக்கிய சிநேகிதன். எனக்கு யாதொரு தீங்கும் வராமல் பாதுகாப்பதை அவன் தன் கடமையாகத் தானே மேல்போட்டுக்கொண்டான். மணியன் விஷமக்காரனென்றாலும் புத்தியில்லாதவனல்ல. மனது வைத்துப் படித்தால் கூடிய சீக்கிரத்தில் எதையும் கற்றுக்கொள்வான். ஆனால் கொஞ்சம் ஆஸ்தியுள்ளபிள்ளையாதலால் தனக்குப் படிப்பு அனாவசிய மென்பது அவனுடைய எண்ணம்.

முதலில் கொஞ்சநாளைக்கு என்னை எல்லாப் பிள்ளைகளும் ஒரு அபூர்வ ஜந்துபோல் பாவித்து வந்தார்கள். நான் பள்ளிக்கூடம்போகிற வேளை தவிர மற்றவேளைகளில் சட்டைபோடமாட்டேன். வேஷ்டிகளை வண்ணானுக்குப் போடாமல் நானே துவைத்து உடுத்திக்கொள்வேன். எண்ணை தேய்த்துக்கொண்டு வெந்நீரில் முழுகமாட்டேன். எண்ணெயும் சீயக்காயும் எடுத்துக்கொண்டு காவேரிக்குப் போய்விடுவேன். யாரோடும் வலுவில் பேசமாட்டேன். சும்மா இருக்கையில் என்முகம் அழுவதுபோலிருக்கும். சிரித்தாலாவது பேசினாலாவது தான அந்தப் பார்வைமாறும். ஆதலால் சில போக்கிரிப் பயல்கள் "அழுமூஞ்சி" என்று எனக்குப் பெயரிட்டார்கள். ஆனால் மணியன் எனக்குத்தோழன் என்று தெரிந்த பிறகு என்னெதிரில் அப்படிக் கூப்பிட்டதில்லை. நானும் அதை லக்ஷியம் செய்ததில்லை. ஆனால் எல்லாவற்றிற்கும் மேலான அதிசய மென்னவென்றால் நான் சந்தியாவந்தனம் செய்துவந்தேன். இதற்காக என்னை எல்லாரும் "வைதீகக் கட்டுப்புட்டி" என்று சொல்வது வழக்கம். கொஞ்சநாளைக்கெல்லாம் மணியனும் என்னைப்போல் சந்தியாவந்தனம் செய்ய ஆரம்பிக்கவே அப்படிக் கூப்பிடுவதை நிறுத்திவிட்டார்கள். சில பிள்ளைகள் மணியனைப்பார்த்துத் தாங்களும் சந்தியாவந்தனம் செய்ய ஆரம்பித்தார்கள்.

முதலில் மணியனுக்குக்கூட நான் அபூர்வ ஜந்துவாகத்தான் தோன்றியிருப்பேன். அவனோடும் அவன் அண்ணாவாகிய நடராஜனோடும் குடியிராவிட்டால் மணியன் மற்றவர்களோடு சேர்ந்து என்னைப் பரிஹாசம் செய்திருப்பான். பெரியவாத்தியாரே பார்த்து என்னை நடராஜனிடத்தில் ஒப்புவித்தமையால் நான் தனக்கு

ச்சொந்த மனிதனைவிட்டேனென்றறிந்து, மணியன் எனக்கு எப்போதும் பக்க உதவியாக இருக்கக் கடமைப் பட்டான். வந்த உடனே என் பெட்டியைத் திறந்து என் மூட்டையை யெல்லாம் அவிழ்த்துப் பரிசோதித்து அதில் வைத்திருந்த சில தின்பண்டங்களையும் ஒழுங்காய் அடுக்கிக் கட்டப்பட்டிருந்த புஸ்தகங்களையும் வேஷ்டிகளையும் பார்த்து "உங்களம்மாளுக்கு செல்வக்குழந்தையோடா நீ" என்று பரிஹாசம் செய்துவிட்டு எனக்குப் புத்திமதிசொன்னான்: "இங்கே இருக்கிற பையன்களெல்லாம் துஷ்டப்பிள்ளைகளா யிருப்பார்கள்; நீ அவர்களோடு வாக்குக்கொடுக்காதே. ஏதாவது கேள்வி கேட்டால் தைரியமாய் யோஜிக்காமல் தியங்காமல் பதில்சொல்லவேண்டும். அவ்வளவுதான் சூக்ஷமம். உன் ஊரைப் பற்றியாவது வீட்டைப்பற்றியாவது, அப்பா அம்மாவைப் பற்றியாவது பேசாதே. பேசினால் எல்லாரும் உன்னை "அம்மாச் செல்லம்" என்று கூப்பிடுவார்கள்" என்றான்.

"உன்னோடுகூட இவ்விஷயங்களைப்பற்றிப் பேசக்கூடாதோ?" என்றேன்.

"என்னோடு பேசலாம். நமக்குள் வித்தியாசமில்லை" என்றான். இதைக் கேட்டபிறகு தான் எனக்குவந்த அழுகையை ஒருவாறு அடக்கிக்கொணடேன்.

மணியன் என்னைப்பற்றி நிரம்பக் கவலையெடுத்துக்கொள்ளுகிறான் என்று தெரிந்து ராமுடு அவனை அடிக்கடி பரிஹாசம் செய்வான். ராமுடு ஒருவன் தான் மணியனை தைரியமாய்ப் பரிஹாசம் செய்யலாம். "மணியா, குழந்தைக்குப் பால்புகட்டியாய்விட்டதா? தூங்கச்செய்துவிட்டாயா? தொட்டில் வேண்டுமா?" என்பான்.

ஒருநாள் "என்னடா எப்போபார்த்தாலும் அந்தப் பையனைக் குஞ்சுபொரிக்கும் கோழி மாதிரி அடைகாக்கிறாயே! அப்படிச் செய்தால் அவன் ஒன்றுக்கும் உதவமாட்டான். வாயுங்கையுமுள்ள பிள்ளையானால் தானே பிழைக்கவேண்டாமா?" என்று ராமுடு கேட்டான்.

மணியன்:—"இன்னுங் கொஞ்நாள் போகவேண்டும். அவனுக்கு இன்னும் தைரியமுண்டாகவில்லை. ஐயோ பாவம்! அவன் ஒருமாதிரிப்பையனாகத்தா னிருக்கிறான். எதுகேட்டாலும் ஆடுபோல் தலையை யசைக்கிறான். நான் என்னசொன்னாலும் சொல்வதை மறுத்துச் சொல்லமாட்டேனென்கிறான். அநேக தடவை அவனை வலுவிலே பேசச்செய்ய வேண்டுமென்று பார்த்தேன். அது என்னால் முடியவில்லை. எப்பொழுதும் நான்தான் முதலில் வாய்திறந்து பேசவேண்டி யிருக்கிறது. அவனுக்கு சுயபுத்தியே இல்லை என்று நினைக்கிறேன்" என்றான்.

ராமுடு:—"நான் சொல்லுகிறதைக் கேள் மணியா! வீணாய் அவஸ்தைப் படாதே. அவன் தகப்பனாருடைய மேல்விலாசம் தெரியுமல்லவோ? நல்ல ஜாதிக்காய்ப்பெட்டி ஒன்று சம்பாதித்து அவனை அதற்குள் வைத்து தின்பண்டங்களும் வைக்கோலும் மரத்தூளும் வைத்து மேலே வாயைமூடிப் பலகையடித்து "உள்ளே கண்ணாடிசாமான், இதுமேல்பக்கம்!! ஜாக்கிரதை!!!" என்று பில்லை எழுதி ஒட்டிட்டு தபாலில் ஊருக்கனுப்பிவிடு. அது தான் சரி என்றான். இவர்கள் சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டே வந்துகொண்டிருந்த எனக்கு என்னைத்தான் சொல்லுகிறார்கள் என்று தெரிந்தபோதிலும் ராமுடு சொன்ன மாதிரியையும் அவன் முகத்தையும் பார்த்து எனக்குச்சிரிப்பு வந்துவிட்டது.

நான் திடீரென்று சிரித்ததைப் பார்த்து ராமுடு "பேஷ்! பாதகமில்லை, அப்படியானால் பையன் பிழைத்துக்கொள்வான்." என்று என்னைத் தட்டிக் கொடுத்தான். அது முதல் ராமுடுவும் எனக்கு சிநேகிதனாகிவிட்டான்.

ஒரு நாள் ராத்திரி நாங்கள் மூன்று பேரும் வழக்கம்போல படித்துக் கொண்டிருந்தோம். நடராஜனும் அவனுடைய விளக்கில் தனியே படித்துக் கொண்டிருந்தான். அப்பொழுது எங்கள் வகுப்பில் ராமாயணத்தில் உத்தர

கண்டம் பாடமாக ஏற்படுத்தப்பட்டிருந்தது. வாரத்தில் இருமுறை ஒரு பாஷையிலிருந்து இன்னொரு பாஷைக்கு மொழி பெயர்க்கும் விதத்தை உபாத்தியாயர்கள் எங்களுக்குக் கற்றுக் கொடுப்பது வழக்கம். இந்தத் தடவை மறுநாள் மொழிபெயர்க்கும் பாடத்துக்காக, உத்தரகாண்டத்தில் லக்ஷ்மணன் சீதையைக் காட்டில் விட்டுத் திரும்பும் பாகத்தில் 10 சுலோகங்களைப் படித்து வரும்படி உபாத்தியாயர் குறித்துக் கொடுத்திருந்தார். பத்து சுலோகமும் படித்தாகிவிட்டது. உடனே ராமுடுவுக்கும் மணியனுக்கும் தூக்கம் வர ஆரம்பித்து விட்டது. ராமுடு "என்னடா மணியா, அடுத்தாற்போல் வருகிற வார்த்தைகளை யெல்லாம் வண்டி வைத்திழுக்கவேண்டும் போலிருக்கிறது!", என்று படிப்பதாகப் பாசாங்கு செய்துகொண்டு வேண்டுமென்று உளறினான். மணியன் தன் கையிலிருந்த இங்கிலீஷ் சமஸ்கிருத அகராதியை மூடிவிட்டு "ஒரு நாளைக்கு 10 சுலோகம் நடந்தாற் போதாதா, அதற்குமேல் வாத்தியாரை யார் நடத்தவிடப் போகிறார்கள்? இந்த நிலவுக்குக் காவேரி மணலில் 'பலி சடுகுடு' ஆடுவோம் வாருங்களடா" என்னவே, இதைச் கேட்டுக் கொண்டிருந்த இன்னொரு பையன் "நம்முடைய இங்கிலீஷ் வாத்தியாருக்குத் தான் உடம்பு சரிப்படவில்லை என்று தெரியுமல்லவோ, நாளைக்கு யாராவது புது வாத்தியார் வந்தால் அவரிடத்தில் நாம் வைத்தது தான் சட்டம் வாருங்களடா!" என்று எல்லோரும் கும்பல் கூடிக்கொண்டு போய் விட்டார்கள். நான் மட்டும் ராமாயணத்தையும் அகராதியையும் வைத்துக்கொண்டு மேலே ஐந்தாறு சுலோகம் படித்துக்கொண்டு போனேன். ஏனெனில் படிக்கப்படிக்க எனக்கு அப்பாடத்தை நிறுத்த மனம் வரவில்லை. சீதையைத் தனிமையில் விட்டுப் போகக்கூடிய லக்ஷ்மணனுக் கிருந்த தைரியம் எனக்கில்லை.

(இன்னும்வரும்.)

ஓர் தாலூகா குமஸ்தா.

## A CATECHISM OF THE BHAGAVAD-GITA, FOR THE USE OF CHILDREN.

ஸ்ரீ கிருஷ்ணாய நம:

## ஸ்ரீ பகவத்கீதை வினாவிடை.

(சிறுவர்க் குபயோகமாக எழுதப்பட்டது.)

190-வது பக்கத் தொடர்ச்சி.

1. கர்மத்தைச்செய்யாமல் ஒருவன் ஆத்மஞ்ஞானத்தை அடையக் கூடாதோ?

கூடாது. ஏனெனில் கர்மமே ஞானத்துக்குக் கருவியாவது. ஒருவன் எவ்வளவு அற்பமான காரியத்தைச் செய்யக் கருதினும், அதற்குத் தகுந்த கருவிகளைப் பிரயோகித்து முயன்று செய்தாலொழிய அக்காரியம் கைகூடுமா? அப்படியிருக்க என்றென்றும் அழியாத பேரின்ப முத்தியைக் கொடுக்கும் ஆத்மஞானத்தை அதற்குத் தக்க கருவியும் முயற்சியுமின்றி ஒருவன் எவ்வாறடையக்கூடும்? கர்மமே ஞானத்துக்குக் கருவி; கர்மத்தைச் செய்யாமல் ஞானநிஷ்டையை அடைதல் அசாத்தியமென்று பகவான் தாமே ஐயந்திரிபறத் தெளிவாகக் கூறியிருக்கின்றார். அன்றியும் ராஜஸாதி குணங்களைக் கடந்து செல்லாத அஞ்ஞானிகளுக்குக் கர்மங்களைவிட்டுச் சும்மாவிருத்தல் முடியாதாகும்; யாதேனும் ஒரு கர்மத்தைச்செய்து கொண்டிருத்தலே அவர்களுக்கு இயற்கையாகும்: ஆதலினாலே அப்படிப்பட்டவர் கர்மத்தை விட்டு விட்டதாகப் பாவிப்பது பொய்ப்பாவனையே யன்றி மெய்யாகாது. கர்மங்களை விடாமற் செய்துகொண்டிருந்தும் எவன் தன் ஞானேந்த்ரியங்களை அடக்கி வசப்படுத்துகிறானோ அவனே சிறந்தவன். ஆகையினாலே ஞானசித்தியடையாத ஒவ்வொருவனும் ஞானத்தை அடையும் பொருட்டுக் கர்மங்களை அவசியம் செய்தலே வேண்டும்.

2. கர்மமாவது என்ன?

கர்மமென்பது பொதுப்பட 'நடத்தல்' 'செய்தல்' முதலாகிய எல்லாக் காரியங்களையும் குறி

க்குமாயினும் கீதையில் குறிக்கப்பட்ட கர்மங்கள் சாத்விக கர்மங்களே. "வேதங்களில் முக்குணத்தைப்பற்றிய பல கர்மங்களும் கூறப்பட்டிருப்பினும் நீ அவற்றுள் சத்துவ கர்மங்களையே அநுஷ்டிக்க வேண்டும்!" என்று (2. 45-ல்) பகவான் கூறுகின்றார். சத்துவ கர்மங்களாவன, புண்யகர்மங்கள்; அவையாவன, ஈசுவர ஆராதனமாகிய எஜ்ஞ கர்மங்களும் அவரவர்களுடைய வர்ணாசிரமங்களுக்கு உரியவாக நியமிக்கப்பட்ட ஸ்வதர்ம கர்மங்களுமாம்.

3. கர்மங்களைச் செய்யும்போது ஒருவன் எப்படிச் செய்தல் வேண்டும்?

கர்மங்களைச் செய்யும்போது அவற்றின் பயனைத் தான் அடையவேண்டுமென்னும் எண்ணமில்லாமல், கேவலம் ஈசுவர ப்ரீதியாகவும், ஸ்வதர்மாநுஷ்டானம் தனக்கு உரியதென்று கருதியும், செய்யவேண்டும். பலனை அபேட்சித்தால் அக்கர்மத்தால் பந்தமுண்டாகும்; அது ஞானசாதனமாகாது.

4. பலனை அபேக்ஷிக்காமல் கர்மங்களை எவ்வாறு செய்வது? அதற்கு திருஷ்டாந்தமென்ன?

பிரதி பிரயோசனத்தை விரும்பிச் செய்தலாவது கூலிக்காக வேலைசெய்தல் போலவும், கிரயத்துக்காகப் பண்டம் மாற்றுதல் போலவும், சுவர்க்காதிபோகங்களை இச்சித்து அவற்றிற்குரிய கர்மங்களைச் செய்தலாம். இக்கர்மங்களால் அந்தந்தக் கர்மங்களுக்கு விதிக்கப்பட்ட பலன்களேயன்றி வேறு பலன் உண்டாகமாட்டா. இவ்வாறன்றித் தனக்குச் 'செய்தல்' கடமையென்றும், ஈசுவரப் பிரீதியாகவும், செய்தால், அக்கர்மங்களுக்குச் சொந்தமாக விதிக்கப்பட்ட பலன்களாகிய பேர்களை அடையாமல் ஒருவன் சித்த சுத்தியையும் ஞானத்தையும் அடையலாகும்.

5. யஜ்ஞ கர்மங்கள் எவரால் நியமிக்கப்பட்டன? அவற்றின் உத்தேசமென்ன? அவற்றைச் செய்யாமையால் உண்டாகும் கெடுதியென்ன?

யஜ்ஞ கர்மங்கள் படைப்புக் காலத்தே சிருஷ்டி கர்த்தாவாகிய பிரமதேவரால் ஜனங்களுடைய நன்மைக்காக நியமிக்கப்பட்டன. பிரமதேவர் ஜனங்களை சிருஷ்டித்து அவர்களுக்கு யஜ்ஞகர்மங்களை நியமித்து அவர்களை நோக்கி, நீங்கள் இந்தக் கர்மங்களைக் கைவிடாமல் சிரத்தையோடு செய்வீர்களானால் இவற்றால் தேவர்களை மகிழ்வித்து உங்களுக்கு வேண்டிய நல்வரங்களையெல்லாம் அவர்களிடத்திலிருந்து நீங்கள் பெறலாகும்; இக்கர்மங்களால் தேவர்கள் திருப்தியடைய அவர்களால் நீங்கள் நன்மையை அடைவீர்களென்று சொல்லி, ஜனங்களுக்கு இக்கர்மங்களை நியமித்தார். ஆகையினாலே, யஜ்ஞகர்மங்களைச் செய்யாமல் தேவர்களால் நன்மை யடைபவர்கள் பிறர் பொருளை அபகரிக்கும் கள்வருக்கு நிகராவர். அவர் உண்ணும் உணவும் அவர்களுக்குப் பாவங்களையே பெருகச்செய்யும், அன்றியும், அவர்கள் தாங்கள் அழிதலேயன்றி, கர்மத்தால் லோகசக்கரமானது சுழன்று நடைபெற்று வருதலின் அக்கர்மத்தைச் செய்யாமையினால், உலகத்துக்குக் கெடுதியைச் செய்பவராவார்கள். ஆதலின், ஈசுவர ஆராதனமான புண்யகர்மங்களை ஒவ்வொருவரும் அவசியம் செய்தல் வேண்டும்.

6. கர்மங்கள் ஆத்மஞானத்துக்குச் சாதனமாயின், ஆத்மஞானத்தைப் பெற்றவர்களுக்குக் கர்மம் செய்யவேண்டுவதில்லையோ?

ஆத்மஞானத்தைப் பெற்றவர்களுக்குக் கர்மம் செய்தல் அவசியமன்று. ஆற்றைக் கடந்துக் கரையேறினவனுக்கு அப்புறம் தோணி வேண்டாமன்றோ! ஆயினும், அவர்களும் பிறரை நல்வழிப் படுத்தும்பொருட்டுக் கர்மங்களை அநுஷ்டித்தல் ஆகும். உலகமானது அறியாமையை உடையது. மேலோர்கள் எதைச் செய்கின்றார்களோ அதை உலகத்தார் தாமும் செய்வார்கள். மேலோர்கள் எதை விட்டுவிடுகின்றார்களோ அதைத் தாமும் விட்டுவிடுவார்கள். ஆகையினாலே ஞானிகள்கூட லோகோபகாரமாகக் கர்மங்களைச் செய்தல் முறைமையாகும்.

7. லோகோபகாரமாகக் கர்மங்களைச் செய்பவர்களுக்குத் திருஷ்டாந்தம் ஆவார் எவர்?

பகவானே திருஷ்டாந்தம். பகவான் செய்யும் காரியங்களெல்லாம் லோகோபகாரமன்றித் தமக்கோர் பயனைக் கருதியாகுமா? பகவானுக்குப் பார்க்கப்போனால் இந்த மூன்றுலோகத்திலேயும் அடையக் கூடிய பிரயோசனம் யாதுள்ளது? ஒன்று மில்லை. ஆகையினாலே பகவான் செய்கைகள் எல்லாம் அநுக்ரகார்த்தமே. பகவான் தாம் செய்தற்குரிய சிருஷ்டியாதி காரியங்களைச் செய்யாமல் விட்டுவிட்டால், மற்றவர்களும் தாங்கள் தாங்கள் செய்யவேண்டிய கர்மங்களைச் செய்யாமல் ஒழிந்துவிடுவார்கள். அதனால், வர்ணசங்கரம் முதலான அநேக கெடுதிகள் உண்டாகி உலகம் அழிந்துபோம். ஆகையினாலே மேலோர்கள் யாவரும் தத்தமக்குரிய கர்மங்களைத் தவறாமற் செய்து பிறரையும் செய்விக்க வேண்டும்.

8. ஞானியும் கர்மங்களைச் செய்தால், அவனுக்கும் அஜ்ஞானிக்கும் என்னபேதம்?

அஜ்ஞானியானவன் பலாபேக்ஷையினாலே கர்மங்களைச் செய்கிறான். ஞானியோ பலாபேக்ஷையின்றி லோகோபகாரமாகக் கர்மங்களைச் செய்கிறான். அன்றியும் ஞானி கர்மங்களின் உண்மை நிலையை யறிந்து கர்மங்களைச் செய்கிறான். அதாவது, கர்மங்களெல்லாம் பிரகிருதி குணங்களால் செய்யப்படுகின்றனவென்றும் ஆத்மாவுக்கு அக்கர்மங்களில் யாதும் சம்பந்தமில்லையென்றும் தெரிந்து தான் செய்யும் கர்மங்களில் அபிமானமில்லாமல் செய்கிறான். கர்மங்கள் பிரகிருதி குணங்களாற் செய்யப்படுதலாவது, பிரகிருதியின் சத்வாதி குணங்களாலே உண்டாகின்ற தேகேந்த்ரியங்களாலே செய்யப்படுதலாம். இவ்வாறு தேகேந்த்ரியங்களாலே செய்யப்படும் கர்மங்களை ஞானியானவன் அறிந்து அவற்றில் பற்றுவைத்தலில்லை. அகங்காரத்தாலே மதிமயங்கி இவ்வுண்மை அறியாத அஜ்ஞானியானவன் கர்மங்களைத் தானே செய்பவனாக எண்ணிப் பலனில் ஆசைவைத்துப் பலன் சித்திக்கின் சந்தோஷமும் சித்தியாவிடின் வியசனமும் அடைகிறான். இதுவே இருவர்க்கு முள்ளபேதம். ஆயினும் இவ்வுண்மையறிந்த ஞானி இவ்வுண்மையை அறியாத அஜ்ஞானிகளுக்கும் கர்மத்தில் அசிரத்தை உண்டாகுமாறு போதனைபண்ணி அவர்கள் மனத்தைக் கலங்கச்செய்யலாகாது. அவர்களது பக்குவத்தை அறிந்து அவர்கள் செல்லும் கர்மமார்க்கத்திலேயே அவர்களைச் செலுத்தல் வேண்டும்.

9. ஸ்வதர்மத்தை அநுஷ்டிக்க இயலாதபோது பரதர்மத்தை அநுஷ்டித்தல் ஆகாதோ?

ஆகாது. ஒருவன் தன் குலத்துக்கும் நிலைமைக்கும் ஏற்படுத்தப்பட்ட கர்மங்களையே செய்கையாக அநுஷ்டிக்க இயலாதபோதும் இயன்ற அளவிலேனும் அநுஷ்டிக்க வேண்டும். தன்னறத்தில் வழுவாமல் நிற்றலினாலே ஒருவனுக்கு அநேக துன்பங்கள் விளையுமாயினும் மரணமே நேருமாயினும் அது பெரிதன்று. அத்துன்பங்கள் இப்பிறப்பில் அவனைப் பாதிக்குமேயன்றி மறுமையில் அவனைத் தொடரா. செய்யத்தகாத குற்றமான காரியங்களைச் செய்யாமையினாலே பாவமாகமாட்டா. பிறருடைய தர்மங்களை அநுஷ்டித்தலே பாவமாகும். அதனால் இப்போது நன்மையை அடைந்தபோதிலும் அது மறுமைக்குக் கெடுதியாகும். நரக முதலான தீங்குகளை விளைவிக்கும்.

10. பரதர்மாநுஷ்டானம் முதலான பாவங்களை ஒருவன் அவை பாவமென்றும் செய்யத்தகாதவையென்றும் தெரிந்திருந்தும் ஏன் செய்கின்றான்?

அதற்குக் காரணம் ராஜசகுணத்தால் உண்டாகும் காமக்ரோதங்களே யாகும். குரோதம்கூட விரும்பிய பொருள் தனக்குக் கிடையாமையாலே உண்டாதலினால், ஆசையே எல்லாக் கேட்டுக்கும் காரணமாகும். இந்த ஆசையினாலே ஞானம் பிரகாசியாமல் மூடப்பட்டு அகங்காரம் மேலிட்டு ஒருவன் பாவங்களைச் செய்கிறான். இவ்வாசையானது ஞா

னேந்த்ரியங்களையும் மனசையும் தனக்கு இடமாகக்கொண்டு அந்த இந்த்ரியங்களின் வழியே மனத்தைச் செலுத்தி மனத்தின் வழியே அறிவைச் செலுத்திப் புத்தியைக் கெடுத்து அநேக தீவினைகளைச் செய்விக்கும். இந்த ஆசைபோலக் கொடியது ஒன்றுமில்லை, இந்த ஆசையை ஒழித்தவனுக்கே ஞானம் சித்திக்கும்.

11. இந்த ஆசையை ஒழிப்பது எப்படி?

மனமுதலிய இந்த்ரியங்களை அவ்வாசைக்குட்படாமல் அறிவால் மீட்டு, அவ்வாறுமீட்டுத் தன் வழிப்படுத்தும் அறிவே எவற்றினு மேலாகிய தானேன்றுணர்ந்து அந்த உணர்ச்சியைத் திடப்படுத்திக் கொள்ள, அவ்வாசை தானே ஒழிந்துபோம்.

எஸ். முத்துஐயர், பி. ஏ.

---

SANKARA-PRYAN.

## சங்கரப் பிரியன்.

(180-வது பக்கத்தொடர்ச்சி.)

### VI. குழந்தைகள் விளையாட்டு.

முந்திய அதிகாரத்தில் சொன்ன சங்கதிகள் நடந்து சுமார் 6-வருஷங்களாயின. அரசனது இரண்டு குழந்தைகளும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தார்கள். அவர்கள் தங்கள் வயதொத்த சிறுவர்களோடு கூடி விளையாடுவார்கள். அவர்களுள் ஒருவன் வைத்திய வேஷம் பொட்டுக்கொண்டு ஒரு இடத்தில் உட்கார்ந்திருப்பான். ஒருவன் வியாதியஸ்தன்போல் நொண்டி நொண்டிக் கொண்டு அவனிடம் வந்து நிற்பான். அவர்களுக்குள் பின்வரும் சம்பாஷணை நடக்கும்.

வைத்தியன்:—என்னப்பா, உனக்கு என்ன உடம்பு?

வியாதியஸ்தன்:—"வைத்தியரே, நான் எங்க ஊட்டுக்குள்ளே

மூத்தவனுக்கு மூத்தவன்

மூவருக்கும் இளையவன்

ஒருநாள் காதுநிறைய மோதிரமிட்டு கைநிறையக் கடுக்கனிட்டு

'வாரான்' என்னும் வேங்கை வருகிறவழியில்

கொசுகு என்கிற மஹா மிருகத்தைக்கண்டு

அறுகென்கிற ஆலவிருக்ஷத்திலேறி

உளறி அடித்துக்கொண்டு கிழே விழுந்தேனையா!

அகடவிகட, விஸ்தாரமான கீரைப்பசலை முள்ளு உச்சந்தலையில் தைத்து உள்ளங்காலில் இறங்கிவிட்டது, அய்யா,

அந்த முள்ளு புறை ஓடட்டுதய்யா! அதற்கு மருந்து சொன்னீரானால் உமக்கு உம்மால் தூக்கமுடியாத அவ்வளவு புண்ணிய முண்டையா!" என்றான்.

வைத்தியர்:—"சீ, இவ்வளவுதானா இதுக்கென்ன! நான் சொல்லுகிறபடி மருந்து பண்ணிச் சாப்பிடு. சாப்பிடுமுன்னே போய்விடும் வியாதி."

வியாதியஸ்தன்:—"சொல்லும். சொன்னபடி செய்கிறேன். வியாதி சொஸ்தமானால் போதும்."

வைத்தியர்:—"இவ்வியாதிக்கு சித்தாமுட்டி பேராமுட்டி, திருவாரூர்த்தேர்முட்டி, மன்னார் கோவில் மண்வெட்டி, சென்னப்பட்டணம் சிங்கக்குட்டி, நாகப்பட்டணம் நாய்க்குட்டி உலக்கைக்கொழுந்து, குந்தாணிவேர், நேற்றைக்கு அடித்தகாற்று, முந்தாநாளிறைத்த வெயில், நாலானாளிறைத்த நிலா, ஐந்தாநாள்பெய்த மழை, இவ்வளவையும் கொண்டு வந்து, குடிப்போன வீட்டிலே உலக்கையில் வைத்து, உரலால் இடித்து அடிப்போன சட்டியில் போட்டு அரைக்கால்படி ஜலம்விட்டு அரைப்படி ஜலமாய்க்காய்ச்சி, உள்ளங்கையில் விட்டு, புறங்கையை நக்கிப்பார்த்தால், உன் உடம்பிலுள்ள வியாதி உடம்பை விட்டுவிட்டு சரீரத்தில் பூந்துகொள்ளுமப்பா. இது தன்வந்திரிபகவான் தன் புத்தகத்தில் கடைசிப்பக்கத்

துக்கு அடுத்த பக்கத்தில் எழுதியிருக்கிறார். மிகவும் அற்புதமான முறை!"

இப்படி சிறுவர்கள் விளையாடுவதைப்பார்த்து அரசனும், அரசியும் குலுங்கக் குலுங்க நகைப்பார்கள். இப்படிச் சிலநாட்களாயின.

ஒருநாள் அரசனும் அரசியும் தமது குழந்தைகளுக்கு அரசர்க்கு வேண்டிய யானையேற்றம், குதிரையேற்றம் வில்வித்தை முதலியவைகளையும், மனுதர்மசாஸ்திரம் முதலான நீதி நூல்களையும் கற்பிக்கத்தக்க ஆசிரியர்களை நியமித்தார்கள். "மூத்தது மோழை: இளையது காளை" என்னும் பழமொழிக்கிணங்க, அரசனது மூத்தகுமாரன் ஆசிரியர்களின் போதனைகளினால் இளையவன் எவ்வளவு பலனை அடைந்தானோ அவ்வளவு பலனை அடைந்தவனல்லன். இவ்வாறு சிலகாலம் கழிந்தது.

## VII. கலியாண யோசனை.

ஒருநாள் அரசனும், மஹாராணியும் ஏகாந்தமாயிருக்கும் சமயத்தில் அவர்களுள் பின் வரும் சம்பாஷணை நடந்தது.

அரசன்:—பிரியே, பத்மி! நமது செல்வக் குமாரர்களுக்கு வயது பதினெட்டுக்கு மேல் ஆய்விட்டனவே. இந்த வருஷமாவது அவர்களது கலியாணத்தை முடித்துவிட வேண்டுமென்னும் அவா ஸதா என் மனதில் குடிகொண்டிருக்கிறது. உனது அபிப்பிராயமென்ன?

மஹாராணி:—நாதா! தக்க வரன்கள் எங்கேயாகிலும் இருப்பதாக மனதுக்குப் புலப்படுகின்றனவா?

அரசன்:—மதுரை மன்னன் சேதுபதிக்கு அதிரூபலாவண்ணியமுள்ள குமாரத்தி இருப்பதாயும் அவருக்கும் நம்மிடத்தில் சம்பந்தம் செய்ய மிக்க அவாவிருப்பதாயும் அப்பெண்ணை நமது செல்வப் புதல்வன் சிரஞ்சீவி சங்கரப்பிரியனுக்குத் தீர்மானித்து விடலாமென்றும் நமது கனிஷ்ட புதல்வன் சிரஞ்சீவி புத்திர பாக்கியனுக்கும் தக்க வரன்தேட வேவுகாரர்களைப் பல ராஜதானிகளுக்கும் அனுப்பியிருப்பதாயும் நமது மந்திரி ஞானசீலன் இன்று காலை எனக்குத் தெரிவித்தார். எல்லாவற்றிற்கும் கலியாணத்தைப்பற்றி நமது குமாரர்களின் அபிப்பிராயமும் எவ்விதமாயிருக்கிறதென்று அறிய விருப்பமுள்ளவனாயிருக்கிறேன் நினது அபிப்பிராயமென்ன?

மஹாராணி:—மதுரை மன்னர் ம-ா-ா-ஸ்ரீ சேதுபதி அவர்களது சம்பந்தம் நாம் விரும்பத்தக்கதே. நமது இளைய குமாரனுக்கும் தகுந்த வரன் கிட்டும் பக்ஷத்தில் கலியாணத்தை இவ்வருஷம் முடித்து விடலாம். தவிர, நமது குமாரர்களது அபிப்பிராயத்தையும் தெரிந்து கொள்வது தம்பதிகளின் க்ஷேமத்துக்கு முக்கியமானதென்று எனக்கும் தோன்றுகிறது. நமது கனிஷ்டபுத்திரன் புத்திரபாக்கியன் நமது அபிப்பிராயத்துக்கு விரோதமாக நடக்கப்பட்டவனல்லன் என்பது திண்ணம். ஜேஷ்ட புத்திரன் சங்கரப்பிரியனைப் பற்றித்தான் எனக்கு சந்தேகமாயிருக்கிறது.

அரசன்:—இருக்கட்டும் எல்லாவற்றிற்கும் நாளைக்குக் காலமே நமது குமாரர்களை வரவழைத்து கலியாணத்தைப்பற்றி அவர்களது அபிப்பிராயத்தையும் தெரிந்துகொண்டு வேண்டிய ஏற்பாடுகள் செய்வோம்.

## VIII. தாசி தனபாக்கியம்.

அரச குமாரன் சங்கரப் பிரியனும் தாசி தனபாக்கியமும் ஒரு சோபாவின் மேல் வீற்றிருக்க அவர்களுள் பின் வரும் சம்பாஷணை நடந்தது.

சங்கரப்பிரியன்:— கண்ணே! ஏது இன்றைய தினம் தாமரைப் புஷ்பம் போன்ற நினது முகம் வாடியிருக்கிறது! எப்பொழுதும் சூரியனைக் கண்ட தாமரைப் புஷ்பம் போல் மலர்ந்திருக்கும் நினது முகம், சந்திரோதயமானதுபோல விருக்கக் காண என் மனம் தவிக்கிறதே! நினது மனதை சந்தோஷிப்பிக்க யான் செய்யவேண்டியது யாதேனு

முள்தோ? செப்பின் அதைச் செய்து முடிக்குமளவும் நாவில் நல்ல தண்ணீரு மூற்றேன் திண்ணம்: அறிவி! என் அன்பிற் கிசைந்த ஆருயிர்க் காதலி!- என்று சொல்லி, தாமரை இதழ்கள் போன்ற மெல்லிய அவளது கரங்களிரண்டையும் தனது கரங்களால் பற்றிக் கொண்டு, அவளது கண்களாகிய கண்ணுடிகளில் தான் பிரதிபலித்து நிற்க, அவளது செந்தாமரைபோன்ற முகத்தை உற்றுப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான்.

தனபாக்கியம்:—எனதன்பின் களஞ்சியமே! எனது உயிருக்குயிரான சங்கரப்பிரியா! எனது முகம் ஏன் வாடி யிருக்கிறதென்று கேட்கிறீர்; சொல்லுகிறேன் கேளும்: சூரியகாந்திப் புஷ்பம், சூரியன் கிழக்கு முகமாயிருக்கும்போது கிழக்கே திரும்பியும், மேற்க்கு முகமாயிருக்கும்பொழுது மேற்கே திருபியும் நிற்பதைப் பார்த்திருக்கின்றீரோ? இல்லையோ, சொல்லும் பார்ப்போம்!

அரசகுமாரன்:—கண்ணே பார்த்திருக்கின்றேன்! இவ்வுபமானம் எதைக் குறிக்கின்றது? இதில் சூரியன் யார்? சூரிய காந்திப் புஷ்பம் எது? சொல்லு பார்ப்போம்!

தனபாக்கியம்:— இவ்வுபமானம் உமதிடம் நான் நடந்து கொள்வதைக் காண்பிக்கிறது. நீர்தான் சூரியன். நான் தான் சூரியகாந்திப் புஷ்பம். எவ்விடம் உமது முகமிருக்கிறதோ அவ்விடம் எனது முகமும் திரும்பியிருக்கிறது. எனது ஜீவித்தலுக்குக் காரணம் நீரே. நீர் என்னைவிட்டும் பிரிந்தால் நான் உயிரோடுவாழ்வேனே! தம்மை விட்டுப் பிரிந்திருக்க நேரும் ஒவ்வொரு நிமிஷத்தையும் சக்கரவாகப்புட்கள் ஆணும்பெண்ணும் இராக்காலங்களில் ஒன்றைவிட் டொன்றுபிரிந்துவிட்டால் என்னிலைமையிலிருக்குமோ அந்நிலைமையிலிருந்தன்றோ கழிக்கிறேன். அப்படியிருக்க, என்முகம் இப்பொழுது வாடியிருப்பதும் ஒரு ஆச்சரியமோ! அது கருகியல்லவோ போயிருத்தல் வேண்டும்!

சங்கரப்பிரியன்:— எனது அன்பிற்கிசைந்த ஆருயிர்க்காதலி! நினது சொற்கள் ஒவ்வொன்றும் உனக்கு என்மீதுள்ள அளவற்ற அன்பைக்குறிக்கிற தென்பதற்குச் சந்தேகமுமுண்டோ! இது நிற்க. சென்ற சிலநாட்களாக நீ பேசும் சொற்களினின்றும் நினது நடத்தையினின்றும், நாம் இருவரும் சீக்கிரம் பிரிந்துவிடுவோ மென்னும் பயம் ஸதா உன்மனதில் குடிகொண்டிருப்பதாக அறிகிறேன். சூரியன் சாயாதேவியை விட்டுப் பிரிந்திருந்தாலுமிருப்பன். சந்திரன் ரோகிணியை விட்டுப் பிரிந்திருந்தாலு மிருப்பன். நின்னைவிட்டு யான் ஒரு நிமிஷமேனும் பிரிந்திருக்கச் சகியேன். அப்படியிருக்க, நீ ஏன் வீணாகப் பயந்து நினது மனதைப் புண்படுத்திக் கொள்கிறாய்?

தனபாக்கியம்,—தாங்கள் சொல்வது மெய்யே!

"வருந்தி அழைத்தாலும் வராதவரா
பொருந்துவனபோமின் என்றாற்போகா—
இருந்தேங்கி
நெஞ்சம் புண்ணாக நெடுந்தூரந்தானினைந்து
துஞ்சவது மாந்தர் தொழில்."

சங்கரப்பிரியன்:—கண்மணியே நீ இப்பொழுது சொன்ன பாட்டிலிருந்து உனது பயம் இன்னம் உன்மனதைவிட்டகலவில்லை யென்று காட்டுகிறதே! அவ்வளவு பலமாக பயம் உன் மனதில் ஊன்றி நிற்பதற்குக் காரணம் யாதாயிருக்கலாம்?

தனபாக்கியம்:—காரணமா! யான் சொல்லுகிறேன் கேளுங்கள். தங்களுக்கு கலியாணம் முடிக்க வேண்டிய வயதாய்விட்டது. இனிதங்கள் மாதா பிதாக்கள் கூடிய சீக்கிரத்தில் ஒரு பெண்ணைத்தேடி தங்களுக்கு கலியாணம் செய்துவிடுவார்கள். பிறகு என்கதி என்ன! பிறகு நான் தங்கள் அரவிந்த முகத்தைப் பார்ப்பதேது?

சங்கரப்பிரியன்:—சீ! இந்த எண்ணத்தினாலா கொஞ்ச நாளாய் நீ இவ்விதமாயிருக்கிறாய்!

அப்பேர்ப்பட்ட எண்ணத்தை முற்றிலும் துறந்துவிடு. எனது தாய் தந்தையர்கள் கட்டாயப்படுத்தி என்கழுத்தில் ஒரு பெண்ணைக்கட்டி விடுவதென்பது நடக்கமாட்டாத பேச்சு. ஆதலின் வழக்கம்போல் உனது செந்தாமரை போன்ற முகம் பிரசன்னமாயிருக்கட்டும்.

தனபாக்கியம்:—தாங்கள் என்மீதுள்ள அன்பினால் இவ்விதம் சொல்லுகிறீர்கள். தாங்கள் தங்கள் தாய் தந்தையர்களுக்கு ஜேஷ்டபுத்திரர் அல்லவா? இவ்விராச்சிய சம்பிரதாயப்படி, மூத்தபிள்ளைதானே பட்டம் சூட்டிக்கொள்ள வேண்டியது. கூடிய சீக்கிரத்தில் தாங்கள் அரசராவது நிச்சயம்; நாமிருவரும் பிரிவதும் நிச்சயம்.

சங்கரப்பிரியன்:—கலியாணத்திற்கும், சிங்காதன மேறுவதற்கும் என்ன சம்பந்தம்? சிங்காதனமேறுவதற்கும், உன்னைவிட்டுப் பிரிந்து போவதற்கும் என்ன சம்பந்தம்?

தனபாக்கியம்:—வேண்டிய சம்பந்த மிருக்கிறது! இவ்விராச்சிய சம்பிரதாயப்படி நீர் பட்டம் அடைய வேண்டுமென்றால் முதலில் கலியாணம் செய்து கொள்ளவேண்டியது அத்தியாவசியம்! நீர் கலியாணம்செய்துகொண்டால் என்னைவிட்டுப் பிரிவது நிச்சயம். நீர் என்னை விட்டுப் பிரிந்தால் நான் உயிர் துறப்பது நிச்சயம்.

சங்கரப்பிரியன்:—பிரியமே! வீண்கவலை ஏன் கொள்ளுகிறாய்! எனக்கு உன்னைவிட ராச்சியம் பெரிதல்ல. ஆகையால் உனக்காக நான் ஒரு ராச்சியமல்ல நூறு ராச்சியங்களைத் துறக்க சம்மதமுள்ளவன். இனி இப்பேச்சையும் இதினாலுள்ள கவலையையும் முற்றிலும் விட்டுவிடு. எங்கே தட்டிலுள்ளவெற்றிலையை மடித்து இப்படிக்கொடு-என்று சொல்லி வெற்றிலையை வாங்கிப் போட்டுக்கொண்டு அவளிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு அரண்மனைக்கு திரும்பி வந்து விட்டான்.

எம். என். நடேசய்யர்.

## SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.

## சீதா அல்லது இல்லறவாழ்க்கை.

(185-வது பக்கத்தொடர்ச்சி.)

### 22-வது அதிகாரம்.

சொர்ணம் தன் மூத்தாள் பெண்ணைக் கொடுமைப்படுத்தியதாக நாம் முன்னமேயே சொல்லியிருக்கிறோம். ஆனால் இவள் எப்படி கொடுமைப்படுத்தினபோதிலும் திக்கற்றவருக்கு தெய்வமே துணையென்பதை அனுசரித்து பகவான் அவள் பக்ஷத்திலேயே இருந்தார். "அரக்ஷிதம் திஷ்டதிதை வரக்ஷிதம் சுரக்ஷிதம் தைவஹதம் வினச்யதி" என்கிறது நாகம்மாளுக்குத் தான் சரியாயிருந்தது. சொர்ணத்தம்மாள் தயிரும் பாலுமாக தன் பெண்ணுக்கு ஆகாரம் போட்டு வந்தும் அவள் இளைத்துக் கொண்டே வந்தாள். நாகம்மாள் ஒரு சுகமும் இல்லாமல் நாள்தோறும் புஷ்டியாய் வளர்ந்து வந்தாள். செல்லத்துக்குவயது ஆக ஆக மேனிகுறைந்தது. நாகம்மாளுக்கு வயது ஆகஆக உடம்பெல்லாம் மேனி இளமையாகிவிட்டது. செல்லத்துக்கு நாலுநாளைக்கு ஒருதரம் எண்ணெய்தேய்த்தும் அவள்பக்கத்தில் போனால் தேகம் நாறும். நாகம்மாள் எண்ணெயை தீபாவளிக்கொருதரம் தான் கண்டும் அவள் பக்கத்தில் போனால் வாசனை வீசும். அவள் உத்தமஸ்திரீ அல்லவா! செல்லத்துக்கு எவ்வளவு ஆபரணம் போட்டபோதிலும் அழகு கொடுக்கவில்லை. நாகம்மாளோ ஆபரணமு மில்லாமல் பிரகாசித்தாள். அவள் முகமே லக்ஷணமாயிருந்தபடியால் அவளுக்கு ஆபரணத்தின் அவசியமே இல்லை. செல்லத்துக்கு வீட்டுக்கு வந்துவாத்தியார் சொல்லிக்கொடுத்தும் படிப்பு வரவில்லை. அதைக் கேட்டுக்கொண்டிருந்த நாகம்மாளுக்கு படிப்பு வந்து விட்டது. இதை யெல்லாம் பார்க்கப் பார்க்க சொர்ணத்துக்கு பொறாமை இன்னும் அதிகரித்துவிட்டது. மனிதர்களுடைய ஒத்தாசை இருந்து என்ன பயன்! கடவுளுடைய ஒத்தாசையல்லவா வேண்டும்! காட்டில் ஒருவரும் கவனிக்காமல் ஜலம் என்பதே அறியாமல் ஒரு மரம் வெகு செழிப்பாய் வளர்கிறது. நாம் அதேமரத்தை வீட்டில் வைத்து, என்ன உபசாரம் செய்து காப்பாற்றின போதிலும் அது பட்டுப்போகிறது. செல்லம்நாகம்மாள் இருவருக்கும் கலியாணம் செய்யத்தகுந்த வயது வந்துவிட்டது. செல்லத்துக்காவது

அவசியமில்லை; நாகம்மாளுக்கு அவசியம் கலியாணம் செய்துவைக்கவேண்டும். இப்படியிருக்க சொர்ணம் நாகம்மாளைப்பற்றி கவனியாமல் செல்லத்துக்குதகுந்த வரன் வேண்டுமென்று தேடினாள். ஆனால் யார் வந்தபோதிலும் பார்த்தவுடன் நாகம்மாளைக்கொடுக்கும்படி கேட்டார்களேயொழியசெல்லத்தை ஒருவரும் லக்ஷியம் செய்யவில்லை. வந்தவர்களிடமெல்லாம் சொர்ணம், நாகம்மாள் திருட்டுக்கையென்றும் நல்ல குணமுள்ளவளல்லவென்றும் தூஷித்துவந்தாள். என்னசொல்லியும் அவர்கள் ஆனால் இரண்டு பெண்களும் வேண்டாமென்று போய்விட்டார்கள். சொர்ணம்மாள் பார்த்தாள். இனி நாம் இப்படி வைத்திருப்பது சரியல்லவென்று முந்தி நாகம்மாளுக்கு கலியாணத்தைச் செய்து முடித்து விடுகிறதென்று தீர்மானித்தாள். ஆனால் நாகம்மாளால் தான் நல்லபணம் சம்பாதிக்கவேண்டுமென்றும் புருஷன் எப்படி இருந்தபோதிலும் அவன் பணம் கொடுக்கக்கூடியவனாயிருந்தால் கலியாணம் செய்துவிடுகிறதென்று தீர்மானித்தாள். இதுநிற்க.

காட்டேரென்கிற கிராமத்தில் தஞ்சாவூர் ஜில்லாவில் ஜானகிராமய்யரென்று ஒரு கிழவர் இருந்தார். அவருக்கு வயது 50 இருந்தும் அவருக்கு லக்ஷ ரூபாய்க்கு சொத்து இருந்தது. அவர் போலீஸ் இன்ஸ்பெக்டர் வேலை செய்து சம்பாதித்து அப்போது பென்ஷன் வாங்கிக் கொண்டிருந்தார். அவருக்கும் அவர் நாட்டுப்பெண்ணுக்கும் ஆகாது. அவர் பிள்ளை சப்மாஜிஸ்ட்ரேட்டு வேலை செய்து கொண்டிருந்தார். அப்படி இருந்தும் இவர் அவருடனிருக்கிறதில்லை. ஜானகிராமய்யர்மஹாகாமி. இவருக்கும் இவர் நாட்டுப் பெண்ணுக்கும் ஆகாமலிருப்பதற்குக் கூட அந்த ஊரார் ஓர் காரணமாக இவர் தன் பிள்ளை ஊரில் இல்லாத காலத்தில் தன் நாட்டுப் பெண்குளித்துக் கொண்டிருந்த இடத்தில் போய் அவளைக் கூப்பிட்டதாயும் அவள் அதற்காக திட்டி அதனால் இருவருக்கும் போதாதென்றும் சொல்லிக் கொள்வார்கள். ஜானகிராமய்யர் அவ்வளவு சொத்து சம்பாதித்திருந்தும் அதை அனுபவிப்பதற்குக் கொடுத்துவைக்கவில்லை. பணம் இருக்கிறவர்களை பணக்காரர்களென்று சொல்லஙியாயம் ஒன்றும் இல்லை. அப்பணத்தைத் தகுந்தபடி செலவு செய்து அதை அனுபவிப்பவர்கள் பணக்காரராவார்களேதவிர மற்றவர்கள் பணக்காரராக மாட்டார்கள். ஒரு ஏழை பணம் இல்லாமல் திண்டாடுகிறான். ஒரு பணக்காரன் பெட்டியைவிட்டு மெடுக்காமல் பணத்தைக் காப்பாற்றுகிறான். இவர்களிருவருக்கும் என்ன வித்தியாசம்? ஏழைக்காவது விசாரமில்லை, அன்றையபசி தீர்ந்து போய் விட்டால் மறுநாள் பசிவரும்வரையில் அவனுக்கு விசாரமில்லை. அது வரையில் அவன் தான் ராஜா. பணக்காரசுங்க செட்டிக்கோவென்றால் பணத்தை செலவு செய்து சுகப்படுகிறதுமில்லை. பணத்தை திருடர்கள் கொண்டுபோய்விட்டால் என்ன செய்கிறதென்று இரவும் பகலும் அதுவே விசாரமாயிருக்கிறான். தூங்குவதுகூடக் கிடையாது. இவர்களையெல்லாம் நாம் அறியாமையினால் பணக்காரர்களென்று கூப்பிடுகிறோம். புதையல் காக்கும் பூதத்துக்கும் இவர்களுக்கும் என்ன வித்தியாசம்? பூதம் தான் அனுபவிக்க கொடுத்துவைக்காமல் கிட்டவந்தவனையெல்லாம் மருட்டிக்கொண்டு இரவும் பகலும் தூங்குகிறது.

இராமுடு:—"வீடுபோபோ வென்கிறது கருவேலங்கட்டை உனக்கு எனக்கு என்கிறது. கல்லெடுப்புக் காலத்தில் நன்றாய் உம்மை ஒரு பெண் கல்லியாணம் செய்துகொள்வாள்! உம்மை கலியாணம் செய்து கொள்வதைவிட ஒரு தூணைக் கலியம்ணா செய்து கொள்ளலாமே."

ஜானகிராமய்யர்—அடே உனக்கு ஏனடா இந்த துடுக்குத்தனம்! உன் எதிரில் நான் கலியாணம் செய்துகொண்டு சுகப்படுகிறேன்பார்.

இராமுடு—ஓய்! கலியாணம் செய்து விடுவீர். அநேக ஏழைகள் பெண்களைக் கிணற்றில் தள்ளமாட்டாமல் உமக்கு கொடுத்து விடுவார்கள். ஆனால் சுகம் என்பதுமட்டும் இருக்காது. சுகமெல்லாம் அசலாத்து சேசனுக்குத் தான். என் வீட்டுப் பக்கத்தில் உம்மைப்போல் ஒரு தாத்தா கல்லியாணம் செய்துகொண்டு பெண்ஜாதியை எதிராத்து சுப்பனுக்கு ஸ்வீகாரம் கொடுத்திருக்கிறான்.

ஒருநாள் தாத்தா 'அவளை' நாறமுண்டை யென்றுவைதார். அவள் உங்களுக்குத் தான் நாறுகிறது. அது தான் எதிராளாத்து சுப்பனுக்கு மணக்கிறது! என்றாள். அப்படித்தான் உமக்கும்.

ஜானகிராமய்யர்— அடே என் சங்கதி தெரியுமா! அவள் அப்படி இருந்தால் நான் உடனே வீட்டைவிட்டு துறத்தி விடமாட்டேனா!

இராமுடு.— துறத்தினால் நல்லதாச்சு. உமக்கு எதிர் வீட்டிலேயே குடியிருந்துகொண்டு "ஜானகிராமய்யர் சமுஸாரம்: யார் வந்தபோதிலும் வரலாம்" என்று போர்டு 'போர்ட்டு' விடுவாள்,

ஜானகிராமய்யர்—அடே அவளுக்கு நான் நல்ல ஆபரணங்களெல்லாம் போட்டு அவளை மயக்கிவிடு வேன், தெரியுமா?

இராமுடு—ஓய் இந்த வீண்சபலம் எல்லாம் வைக்காதேயும்! இந்தக் காலத்துப் பெண்கள் மன்மதன் போல் இருக்கும் புருஷனையெல்லாம் விட்டு விட்டு ஓடிப்போகிறார்கள். அவள் உம்மை எங்கே லட்சியம் செய்யப் போகிறாள்! நீர் நகையைப் போட்டு என்ன செய்கிறது! கலியாணமான ஆறுமாசத்திற் கெல்லாம் அவள் மொட்டைத் தலையில்தானே உமது நகைகளைப் போட்டுக் கொள்ளவேண்டும்? அவள் அதை யோசிக்க மாட்டாளா?

ஜானகிராமய்யர், "அடே நீ அஸத்துப்பயல். உன்னோடு பேசமுடியா" தென்று வீட்டுக்குப் போய் விட்டார். ராமுடு, தாத்தா உமக்கு கலியாணப் பயித்தியம் பலமாயிருக்கிறது. வீணில் ஒரு பெண்ணைக் கெடுக்காதேயுங்கள் என்றான். அவர் காதில் படாததுபோல் போய்விட்டார். சொர்ணம் நாகம்மாள் கலியாணத்தை நிச்சயம் செய்ததும் அத்துடன் தன் பெண் கலியாணத்தையும் நடத்த வேணுமென்று தீர்மானித்தாள். ஆனால் தான் நாகம்மாளுக்காக பணம் வாங்குவது காமேசுவரய்யருக்குத் தெரிந்தால் கலியாணத்திற்குப் பணம் கொடுக்கமாட்டாரென்று அந்தப் பணத்தை ஒருவருக்கும் தெரியாமல் வாங்கி லேவாதேவி செய்து விட்டாள். செல்லத்துக்கு வரன் விசாரித்ததில் நல்ல பணக்காரனாகவும் சிறுபிள்ளையாகவும் வெகு அழகாகவும் தஞ்சாவூரில் ஒருவன் இருக்கிறதாக ஒருவர் சொர்ணம்மாளுக்குச் சொன்னார். சொர்ணத்தம்மாள் வெகு சந்தோஷப்பட்டுக் கொண்டு கலியாணச் செலவிற்காக இரண்டாயிரம் ரூபாய் கொடுக்க வேண்டியதென்றும் பெண்ணுக்கு நகை கணக்கில்லாமல் போடவேண்டுமென்றும் பேசினாள். அவர்கள் அப்படியே சம்மதித்து சொர்ணத்தினிடம் இரண்டாயிரம் ரூபாய் கொடுத்தார்கள். சொர்ணம் இதையும் காமேசுவரய்யரிடம் சொல்லாமல் கலியாணச் செலவெல்லாம் தான்தான் பொறுத்துக் கொள்ளவேண்டுமென்று அவரிடமும் பணம் கேட்டாள். காமேசுவரய்யருக்கு கடன் வாங்க கேட்கவும் வேணுமோ! காவாலி சுப்பய்யன் உடனே குத்தகைப் பணத்தில் இரண்டாயிரம் ரூபாய் பணவட்டிக்கு காமேசுவரய்யருக்கு கொடுத்தான். நாகம்மாள் தன்னை ஒருகிழவனுக்கு கொடுக்கப் போகிறார்களென்று கேள்விப்பட்டு நிரம்பவும் மனவருத்தப்பட்டு நமக்கு தெய்வம்தான் துணையென்றுப்கவானை நினைத்து "பகவானே எனக்கு ஒரு அவமானத்தையும் கொண்டுவந்து வைக்காதேயும். என் சிறியதாய்என்னைப்பாழும் கிணற்றில் தள்ளுவது போல் நினைத்து இந்தக் கலியாணம் தீர்மானித்திருக்கிறாள். ஆனால் எனக்கு மட்டுக்கும் அது பாழும் கிணறு இல்லாமல் அமிர்தத்தை கொடுக்கக்கூடிய கிணறாகச் செய்யவேணு"மென்று வேண்டிக்கொண்டாள். இப்படி பிரார்த்திக்கும் அநாதையை பகவான் அலட்சியம் செய்வாரா! அவள் பிரார்த்தித்தபடியே பகவான் அனுக்கிரகம் செய்தார். கலியாணம் வெகு சிறப்பாய்நடந்தது. கலியாணத்திலும் நாகம்மாள் வெகு அலட்சியமாய்த் தான் நடத்தப்பட்டாள். ஆனால் இவ்வளவு வஞ்சனைக்கும் பிரயோசனம் சொர்ணத்துக்கு உடனே கிடைத்து விட்டதென்பது இதைப்படிக்கப்படிக்கத் தெரியவரும்.

(இன்னும் வரும்)

எஸ். இராமஸ்வாமி ஐயர், பி.ஏ.

---

## CURRENT NOTES AND TOPICS.

# விசேஷக் குறிப்புகளும் விஷயங்களும்

### மனதைபடக்கி யாளல்வேண்டும்

"The emotional nature, if you do not control it, may run away with you and maim you."

உத்ஸாஹ குணம் எல்லாருக்கும் உண்டு. உத்ஸாஹம் இல்லாவிட்டால் ஒரு காரியமும் ஆகாது. ஓடுகின்ற ரயிலுக்கு நீராவி எப்படியோ, டிராம்வண்டிக்கு மின்சார சக்தி யெப்படியோ, அப்படிப்போல, வேலைசெய்யும் மனிதனுக்கு உத்ஸாஹம் முக்கிய காரணமாகவிருக்கிறது. மனது உத்ஸாஹம் அடையும் பொழுது, மனோசக்தி பொங்கி மனதினின்று உற்பத்தியானவும், மனதின் காரியங்களாயுமுள்ள இந்திரியங்களில் வழிகின்றது. அப்பொழுது இந்திரியங்களெல்லாம் மனோசக்தியால் நிறைந்து தொழில் செய்யப் பரபரத்துத் துடித்துக் கொண்டிருக்கின்றன. இந்தப் பரபரப்பை யடக்கி யாள்பவன் எவனோ அவனே தீரன். அப்படி யடக்கச் சக்தியின்றி அதன் வழிச்செல்லுகிறவன் மூடன். இவன் இந்திரிய வழிசென்று அல்லற்படுவதன்றி, கடைசியில்

இந்திரியங்களின் சக்திகுறையும்பொழுது திக்க ற்றுத் திசைதெரியாமல் கிடந்து மயங்குகிறான். ரயில்வண்டியோடுகையில், ரயிலைவிட்டு விலகினால் என்ன நேரிடுகிறது? வண்டியோட்டம் நின்றுபோய் இஞ்சினுடைய சக்தி குறைந்து இஞ்சினும் வண்டியும் ஓட்டமற்று வழியை யடைத்துக்கொண்டு கிடக்கின்றன. அப்படியே தான் இந்திரியவழி செல்லும் மனதும். ஆகையால் உத்ஸாஹம் பிறந்தகாலத்தில், உத்ஸாஹக் கொதிப்பை விவேகமனசினால் அடக்கியாளாதவன் பெண்யானையின்மே லாசைகொண்டு படுகுழியில்விழும் ஆண்யானைக்கொப்பாவன். இப் படியே மனதையும் விவேக புத்தியினால் அடக்கி யாளல்வேண்டும்.

தன்னைத்தா னெஞ்சம் கரியாகத் தானடங்கில்
பின்னைத்தானெய்தாப் பயனில்லை—தன்னைக்
குடிகெடுக்கும் நெஞ்சிற்குக் குற்றேவல் செய்யின்
பிடிபடுக்கப்பட்ட களிறு."

## அடங்காமனம் ஆபத்து விளைக்கும்.

அடங்காமனத்தைப் பிடிபடுக்கப் பட்ட களிற்றுக்கு ஒப்பாகச் சொன்னார். அதாவது காட்டில் மதோன்மத்தனாக ஸ்வயேச்சை குறையாமல் திரியும் ஆண்யானையானது, ஆனை பிடிக்கப் பழக்கப்பட்ட பெண்யானை கூட்டுறவு செய்ய, அதன்பேரில் மோஹித்து அது போம்வழியில் தானும் போவதால் கடைசியில் படுகுழியில் விழுந்து தனது ஸ்வதந்தரத்தையு மிழக்கிறது. அதுபோல, தனது சங்கல்ப விகற்பங்களாகிய காட்டில் மதோன் மத்தனாய்த் திரிந்து கொண்டிருந்த ஆத்மானு சந்தான மனமானது அதன் இனத்தைச் சேர்ந்ததாயிருந்து விஷயபோகங்களில் சிக்கிப் பழகிய பெண்யானையை யொத்த இந்திரியங்களுடைய கூட்டுறவினால் அவற்றின் வழிப்பட்டுச் செல்லுங்கால் கடைசியில் ஆபத்தாகிய படுகுழியில் விழுந்து தன் ஸ்வதந்திரத்தையு மிழக்க நேரிடுகிறது. இது "எட்டுச்சுரைக்காய்" சமாசாரமாக வாக்வாதத்துக்குமட்டும் உபயோகமான வாச்சா வார்த்தையல்ல. நித்தியப் படி நடத்தையில் ஒவ்வொரு விஷயத்திலும் இதனுண்மையை உள்ளபடி யிருந்தாய்ந்து பார்த்தால் நாமுணரலாம். பிரத்தியேகநபர்கள் தம் கடமையைச் செலுத்துங் காலையிலும், ஜாதி யொருமைப்பாட்டுக்காக வுழைக்கும் தேசாபிமான பக்தர்கள் தேசத்தாருக்குரிய தங்கள் கடமைகளைச் செலுத்தும்போதும் இந்த மனோதர்மவிதியை மனதிலிருத்தி யுஷாராயிருந் துழைக்காமையால், ஆபத்துக்குள்ளாவதை நாம் நித்தியப் பிரத்தியக்ஷமாய்க் காணலாம். இதற்கு உதாரணம் வேண்டுமாயின் இப்பொழுது நம் கண்முன் நடந்துவரும் விசேஷங்களையே யெடுத்துக் கொண்டாராய விளங்கும்.

## திருநெல்வேலிக் குழப்பம்.

திருநெல்வேலியி லுண்டான குழப்பத்துக்கும் அதனால் நேர்ந்த ஆபத்துக்கும் காரணமென்ன? கேவலம் இந்திரிய வழிப்பட்டுழைக்கும் வேலைக்காரர்கள் அவர்களுக்குக் கிடைக்கும் கூலிபோதாதென்று முதலாளிகளோடு சண்டை போட்டார்கள். அவர்களுக்கு புத்தி விவேகம் அதிக மின்மையால், அவர்கள் பக்ஷத்தில் நியாய மிருக்கும்போது அவர்களுக்கு வேண்டிய உதவிசெய்ய வேண்டியது விவேகிகளின் கடைமையாம். ஸ்ரீமான் சிதம்பரம் பிள்ளையும், பிரம்மஸ்ரீ சுப்ரமணிய சிவாவும் இன்னும் பலரும் அவர்களுக்கு வேண்டிய உதவி செய்தார்கள். இதனால் வெள்ளைக்கார வியாபாரிகள் மாச்சிரியங்கொண்டு அவர்களுக்குக் கேடுசெய்யச் சூழ்வினைதேடினார்கள்.

இந்த சமயத்தில் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் தங்களுடைய நடுவுநிலையை நாடிநிற்காமல், ஒருபக்ஷமாய் நடபடிக்கை நடத்தக் கல்லுண்டாக நேரிட்டது. உத்தியோகஸ்தர்கள் ஒழுங்குப்படி நடப்பதாக அக்கிரமஞ் செய்ய, சாமான்யஜனங்கள் மனக்கொதிப்பினால், மனம் போனபடிவிட்டு ஒரு நாழிகையில் பட்டணத்தை த்வமஸம் செய்யத் தலைப்பட்டார்கள். உத்யோகஸ்தர்கள் துப்பாக்கிகொண்டு கூட்டத்தில் நாலுபேர்களைச் சுட்டு வீழ்த்தக் கூட்டம் கலைந்தது. ஆனால் ஜனங்கள் கலகம் செய்தார்களென்றும், சிலர் இராஜத் துரோகம் செய்தார்களென்றும் இரண்டு மாசமாகக் கேஸ்கள் நடந்து வருகின்றன. நடக்கும் கேஸ்விசாரணைகளைப் பற்றி இப்பொழுது நாம் ஏதும் சொல்ல வசமில்லை. அது எப்படியானாலும், ஆகட்டும். மனம்போன போக்கிலே ஒரு நாழிகை நேரம் எல்லாரும் போனதால், எவ்வளவோ கேடு விளைந்துவிட்டது! ஜனங்களுக்கு சர்க்கார் அதிகாரத்தை பலாத்கார

மாய் மீறிநடக்கச் சக்தியில்லை யென்பது தெரிந்த விஷயமாயினும், மனோசக்தியால் முரட்டுபல மாத்திரமுள்ள ஒரு பகைவனை வெல்லலாமென்று மனோதர்மத்தை யெடுத்துச்சொன்ன சொல்லை சாமான்ய ஜனங்கள் தங்கள் மனதை யடக்கமாட்டாமல், இந்திரியங்களின் வழியே விட்டு உடனே பழிவாங்க வேண்டுமென்கிற புத்திகெட்ட மூடத்தன்மையான எண்ணத்தால் தூண்டப்பட்டு ஒருநாள் துள்ளிக்குதித்து இப்பொழுது ஆபத்திலகப்பட்டுக் கொண்டு விழிக்கிறார்கள். மனதுக்கு சக்தியுண்டாவது இந்திரிய வழிப்பட்டுச் செல்வதாலல்ல. இந்திரிய நிக்ரகம் செய்து, மனதை அந்தர்முகமாகத் திருப்பி ஆத்மத்தியானத்தினால் ஆத்ம சந்நிதானத்தை யடைவதால் அப்பொழுது ஆத்மசந்நிதானத்தின் மகிமையால் அதற்கு ஆத்மசக்தி யுண்டாகிறது. அந்த அபூர்வ சக்தியுண்டாகுங்கால் மனதுக்கு எப்போதுமில்லாத ஒரு நிதானமும், சாந்தமும், முன்பின் அறியும் சக்தியும், சாதன சாத்திய தராதர சாமர்த்தியமும், உள்ளபடி யாத்மானுபவம் பெற்றுவிட்டால், த்ரிகால ஞானமும் உண்டாகிறது. அப்பொழுது தனக்கென்று ஒரு காரியம் செய்ய யத்தனிப்பதில்லையால் மனக்கண் பஞ்சடையச்செய்யும் அகங்காரமமகாரவிர்த்திகள் விவேகத்தை அழித்து வில்லங்கங்கள் விளைப்பதில்லை. இதனால் எப்போதும் பாரதூர யோசனைசெய்து கார்ய கர்ரணங்களை நிதானமாய் ஊகித்தறிந்து அறிவு வெளிச்சத்தில் "அறிவுருவேயான "பராசக்தி"யின் உபாஸனை மகிமையால் அவளுடைய வரப்பிரஸாதத்தை மேற்கொண்டு பொதுக்ஷேமத்துக்காக அவள் காட்டிய வழியிலுழைக்க அருகனாகிறான். அப்பொழுது தான் நினைத்தது முடிக்கு மாற்றலும், நிதானபுத்தியும், ஜீவகாருண்யமும், அதுகாரணத்தால் பழிக்குப்பழி வாங்கவேண்டுமென்கிற தப்பெண்ணம் தோன்றாமையும், இவை போன்ற இன்னுமனேக மேலான குணங்களும் வாய்க்கின்றன. "வர்மமப்பாவெல்வதில்லை, வாயாலொன்று மாவதில்லை" என்ற அம்பிகை வாக்கின் அருத்தத்தை அப்போது தான் உள்ளபடி புணர்ந்துய்ய வல்லவனாகிறான். தேஹமே சதம், இந்திரியபோகமேபோகமென்று நம்பியிருக்கும் வெள்ளையர்களைவிட, இந்திரிய நிக்ரகமே சுகத்துக்குவழி, விதேக கைவல்யமே நித்யானந்தசுகமளிப்பது என்றுபோதிக்கும் வேதாந்த ஞானத்தில் நம்பிக்கையுள்ளவர்களான ஆரியர்கள் மேலானவர்கள் தான். அவர்களுக்கிவர் உட்பட்டிருப்பது சாத்தியமில்லை தான். ஆனால் இப்பொழுது ஸ்வராஜ்யத்துக்காகப் பாடுபடுவதாகச் சொல்லும்பாமரர்களெல்லாம் வேதாந்த ஞானம் கைவந்த யோகிகள்தானோ வென்று சற்று யோசிக்கவேண்டும். நமது முன்னோர்கள் உந்நதபதவியிலிருந்தால், அப்பதவியிலிருந்து வீழ்ந்து, அவர்களுடைய உயர்ஞானத்துக்கும் நமக்கும் எவ்வளவோ தூரம் என்று சொல்லும்படி யிருக்கும் ஜாதிமதப் பிரஷ்டர்களான நாம், நமதுதாழ்ச்சியையும் வீழ்ச்சியையும் உன்னி, உள்ளபடி உண்மை நிலையிலிருந்துழைத்துப் பூர்வநிலையடைய வேண்டிய பிரயத்தனங்களைச் செய்யாமல், காட்டுக்கத்தலாக "வந்தேமாதரம்" என்னும் அதிரகஸியமான ஆத்மார்த்த சாதக மஹா மந்திரத்தை, இஞ்சிதின்ன குரங்கு பார்ப்பானைப் பார்த்துப் பல்லிளித்துக் கோணங்கி காட்டுவதுபோல், கண்டவிடமெல்லாம் கலபையுண்டாகும்படி குருட்டுத்தனமாய் முரட்டுப்பிடிவாதம் கொண்டு "வந்தேமாதரம்" "வந்தேமாதரம்" என்று வாயாற் சொன்னமாத்திரத்தால் ஜகன்மாதாவின் வரப்பிரஸாதம் கிடைத்துவிடுமா? இந்த வுண்மையை வற்புறுத்திச் சொல்பவர்களை "வல்லடிவழக்கைச் சொல்லடி மாமி" யென்று மடிபிடித்துச் சண்டைக்கிழுப்பதில் பிரயோசனமில்லை. சென்ற 150 வருஷங்களாக வயிற்றுக்கஞ்சிக் காசைப் பட்டுக்கொண்டு ஸ்வதர்மத்தைவிட்டு விலகிப் பரதர்மத்தை யனுசரித்து வரும் ப்ரஷ்டர்களாய் விட்ட நாம், பரதர்மம் பாபத்தையே விளைக்குமென்பதையுணர்ந்து, ஸ்வதர்மத்தை யனுஷ்டிக்க முயற்சிக்க வேண்டும். ஸ்வதர்மத்தை யனுஷ்டித்தல் என்றால், மூக்கைப் பிடித்துக்கொண்டு வெள்வால்போல் தலைகீழாகத் தொங்குதல்தான் ஸ்வதர்மம் என்று நினைக்கக்கூடாது. சாதனசாதகங்களை சாத்தியத்தோடு ஒன்றாக நினைத்து மனம் குழம்பக்கூடாது. அர்ச்சுனனுக்கு ஸ்வதர்மத்தை யுபதேசித்த ஸ்ரீகிருஷ்ணபகவான் அவனை வில்லை யெறிந்துவிட்டு காட்டுக்குப்போய்பிச்சையெடுத்துண்டு பிழையென்று சொல்லவில்லை. அப்படிப் போனாலும் போவேன், உற்றார் உறமுறையார் நிறைந்த இப்போர்க்களத்தில், இவர்களையெல்லாம் கொன்று இராஜ்ஜியம் ஆள வேண்டேன், என்று சொன்னவனை நோக்கி "அப்பா, காட்டுக்குப் போய், கஷ்டப்பட்டுத் தசுப

செய்தல, உன் ஸ்வதர்மமன்று! உனக்குரிய க்ஷத்திரிய தர்மத்தை நிஷ்காமிய கர்மவிதியை யனுசரித்துநின்றுகுறைவறச்செய்து நீ பேரும் புகழும் பெறுவாயாக. பின்னல் நீ இராஜ்யம் ஆள்வதும் ஆளாததும், இப்பொழுது நீ போர் முகத்தில் நின்று சண்டைபோடுவதற்குக் காரணங்களாகமாட்டா. உன் கட்மையை நீசெய்து கிருதகிருத்தியனுவாய்!" என்று பன்முறையும் சொல்லி ஆத்மோபதேசம் செய்தது மன்றி, ஆத்மோபதேசம் ஏறாத அவனுக்குத் தமது விசுவரூபதரிசனமும் காட்டி அவனைத் தேற்றி, அவனறியாத ஆத்மசக்தி அதுதானுகி எல்லாவற்றையும் நடத்திக்கொண்டு போகிறது. "ஸ்வதர்மவழியில் நின்றுழைக்கமட்டும் உனக்கதிகாரமேயன்றி உழைப்பின் பலனை யனுபவிக்க அதிகாரமில்லை. ஆகையால் கர்மபலனையெனக் கர்ப்பணமாகச் கொடுத்துவிட்டு, உன்கடமையை மட்டும்நீசெய்வாயாக"வென்று, கர்மபலத்யாக மஹத்துவத்தையும், நிஷ்காமியகர்மதர்மத்தையும் ஐயந்திரிபற அவனுக்குப் போதித்தருளினர். அந்தப் போதனையை மனத்திலிருத்தி அவ்வழிப்பட்டு நாமுழைத்தாலன்றி நமக்கு இகத்திலும் பரத்திலும் கதி மோக்ஷமில்லை. வெள்ளையரைப் பார்த்து நாமும் அவர்களைப் போல் ஆகவேண்டுமென்றும், வெள்ளைக்காரர்கள் குடியரசு செலுத்துவதைப் பார்த்து நமக்கும் அவ்வித அரசு சித்திக்கவேண்டுமென்றும் வீணுசைப்பட்டால், அது சித்திக்காது. ஸ்வதர்மத்தைக் கைவிடாது நின்றுழைத்தால் ஸர்வ சுதந்திரங்களும் நமக்கு சித்திக்குமென்பதிற் சந்தேகமில்லை. ஸ்வதர்மத்தைக் கைவிட்டுப் பரதர்மத்தை யனுசரித்து நடக்கும் வரையில் நமக்குச்சித்திப்பதெல்லாம் அல்லலும் கல்லலும் தவிர வேறென்றும் சித்தியாது. இது சம்பந்தமாக அலஹபாத்தில் கூடிய கன்வேன்ஷன் கமிட்டியார் செய்துள்ள தீர்மானம் பரதர்மத்தையனுசரித்ததாக விருப்பதென்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறோம். மற்றப்படி யவர்கள் கக்ஷிச்சண்டைகளிலும், வாதானுவாதங்களிலும் நுழைந்து வாதிக்க நமக்கு இஷ்டமில்லை. அந்நியதர்மத்தையிச்சித்து அந்தப்படி நடக்க விரும்புகிறவன், அழிந்தேபோவானென்பது நித்தியமான மனுதர்மவிதிகளிலொன்று. அதைமாற்ற யாவராலும் முடியாது. வெள்ளைக்காரர்கள் இந்தியர்களின் மனுதர்மமுணராது அதிகாரதோரணையில் தேசஹிம்சை செய்யும் சக்தி தங்களிடமிருக்கிறதென்பதைக் கொண்டு முன் பின் யோசியாமல் துராகிரதத்தில் பிரவேசிப்பதால், "தன்வினை தன்னைச்சுடும்" என்பதின் உட்கருத்தை இவர்கள் உணரவில்லையென்று தெரிகிறது. இந்தியாமந்திரியாகிய மிஸ்டர், (இப்பொழுது லார்ட்) மார்லியவர்கள் இந்தியர்களின் மனுதர்மத்தை யுள்ளபடியுணரக்கூடவில்லையென்று ஒப்புக்கொண்டார். ஒப்புக்கொண்டும், அவர்கள் மனு தர்மத்தை யுணராது அவர்கள் மனுபீஷ்டங்களைத்தடுக்க முரட்டுவழிகளில் ஸர்க்காருக்குள்ள அதிகாரத்தைச்செலுத்த இவர் சம்மதித்தது தத்துவஞானியென்றுபேர்பெற்றஇவர்மட்டில், அதிசயிக்கத் தக்கதாகவே யிருக்கிறது!

---

## கல்கத்தாவில் வெடிகுண்டு யந்திரங்கள் அக்கிரமம்.

தத்துவஞானியாயிருக்கப்பட்ட மந்திரி பிரஜைகளின் மனுதத்துவமறியாது அவர்கள் மனக்கொழுப்பை யடக்க யத்தனிப்பதின் பயனுக ஒரு புதிய அநீதி தலையெடுக்கக் கிளம்பியிருக்கிறது! ஐரோப்பா அமெரிக்கா தேசங்களில் "அநார்கிஸ்டஸ்" என்று சொல்லும் இராஜாங்க வைரிகள் தலைப்பட்டு, துரைத்தன சட்டங்களும் ஒழுங்குகளும் செல்லாமற் செய்ய, உயிருக்குத் துணிந்து, அதிகாரத்துக்கிருப்பிடமாகியவர்கள் உயிரை, பட்டாரென்று வெடித்துக் கொல்லும் 'பாம்ப்ஸ்' என்னும் நூதன வெடிகளைத் தயார் செய்து, இரகசியமாய் அவற்றைத் தாங்கள் கொல்ல நினைக்கிறவர்கள் பேரிலாவது அவர் சமீபத்திலாவது எறிந்து, அது பட்டாரென்று வெடித்துக் கிட்டவிருப்பவர்களைக் கொல்ல, அதினுல் ஒருவித திர்பதியடைகிறார்கள். இவர்களுடைய கொள்கையென்னவென்றால், அதிகாரிகள் குடிகளுடைய க்ஷேமத்தை நாடியுழைக்காது ஸ்வய நலத்தை நாடுகிறவர்களா யிருத்தலால், இந்த அதிகாரிகளும் இவர்கள் செலுத்தும் அதிகாரமும் இல்லாமற்போனுல் குடிகள் இவர்களுடைய ஹிம்ஸை யொழிந்து சுகப்படுவார்களென்பதாம். இது மிகவும் கொடியதோர் தப்பெண்ணம். அக்கிரமம் நீங்குவதினுலேயே கிரமம் தானுக ஏற்பட்டுவிடுமென்று நினைப்பது தப்பு. காட்டையழித்தால், அது தானே தோப்பாகிவிடுமா? இது இவர்களுடைய மனத்தின் ஆரோபம். அனுபவித்துப் பார்த்தால், இதிலுள்ள அபவாதம் வெளிப்படும். பயிர் வளர்

வதற்கும் களைபிடுங்குவதற்கும், பயிர்த்தொழிலில் ஒருவித சம்பந்தமிருக்கிறது. நல்ல வித்தாகிய தானியங்களைப் பக்குவமறிந்து பண்படுத்திய நிலத்தில் விதைத்து அது முளைத்துப் பயிர் பயிராகி யிருந்தாலொழிய, களைபிடுங்குவதினால் மாத்திரம், பயிர் விளையும் என்பது பொய்யாகி விடும். அதுபோல, குடிகள் தங்களைத் தாங்களே யடக்கியாளக் கற்றிருந்தாலொழிய அதிகாரக் கட்டுப்பாடு நீங்குவதால் மட்டும் அவர்கள் ஜனசமூகக் கட்டுப்பாட்டுக் குள்பட்டு வாழ்வார்களென்பது துர்லபம். ஜனங்கள் தன்னைத்தானறிந்து அடங்கி வாழக் கற்றிருந்தால் அதிகாரிகள் அக்கிரமம் அவர்களிடத்துச் செல்லாது. சுருதியில் ஸ்வராஜ்யம் யாருக்கு சித்திக்குமென்று சொல்லியிருக்கிறதோ அவன் பசுமேதம், ச்யேனமேதம், இராஜசூயம் என்கிற மூன்று யாகங்கள் செய்தவனாக விருக்கவேண்டும். அப்படிப்பட்டவன் வியஷ்டிரூபமனிதனாயிருந்தாலும் சரி, சமஷ்டிரூப தேசஸ்தர் ('நேஷன்') ஆகவிருந்தாலும்சரி, மனசு, வாக்கு, இந்திரியங்கள் எல்லாவற்றிற்கும் அதிபதியாகி, ஸ்வாராஜ்யம் என்கிற தன் மனதையடக்கியாளும் ஸ்வதந்திரம்பெற்றவனாய், அது மூலமாய், பிரம்மத்தையே யறிந்து பிர்ம்மமேயாகிறான் என்று சொல்லியிருக்கிறது. ஆகையால், இந்திரிய நிக்ரகமும், மனோவாக்கு அடங்குதலும் பெறாதவர், ஸ்வராஜ்யஸம்பந்ந ராவதற்கு அருகரென்று சொல்வது சுத்தத்தப்பு. இந்தத் தப்புக் கொள்கையைக்கொண்டு, அநேகர் மனம்போனதே போக்காய், அதிகாரிகள் அக்கிரமம் செய்தால், அதற்கு பதில் நாமும் அக்கிரமம் செய்து பழிக்குப்பழி வாங்கவேண்டுமென்கிற தாழ்ந்த எண்ணத்தால் தூண்டப்பட்டு உயர் பாவநடிப்புமட்டும் மேற்கொண்டு வெடியந்திரங்கள் செய்யுமுபாயமறிந்து, அதைக்கொண்டு இரகசியமாக வெடியந்திரங்கள் தயார் செய்து சிலரைக்கொல்லயத்தனிக்க, அது "தானொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்தது" என்கிற வசனப்படி, இவர்கள் நினைத்தவர்களைக் கொல்லாது நிரபராதிகளான சாது ஜனங்களைக் கொல்ல, இவர்கள் பழிபாவம் இவர்களையே சூழ்ந்துகொண்டு, இவர்களுக்கே ஆபத்தாக முடிந் திருக்கிறது. கல்கத்தாவில் இப்படித்தான் மூர்க்க வழியில் பிரவேசித் துழைத்த பலர், இவர்கள் இரகசியமாகச் செய்துவந்த வெடி யந்திரங்கள் அவை செய்வதற்கேற்ற உபகாரணங்களோடு போலீசார் வசமகப்பட்டு, விசாரணையிலிருக்கிறார்கள். நிதானபுத்தியில்லாமல் பெருங் காரியங்களில் முயற்சிக்கிறவர் துன்புறுவார்களென்பது திண்ணம். நல்வழியில் பிரவேசித்துப் பாடுபட்டுழைத்துக் கடைத்தேறச் சக்தியில்லாதவர்கள், குறுக்கு வழியில் சென்று சீக்கிரத்தில் தானே லகுவாகக் காரியசித்தி யடைந்து விடலாமென்று நினைத்துத் தப்பு வழிகளில் பிரவேசித்துப் படாதபாடும் பட்டுழல்வது இப்படித்தான். தேசப் பொதுவுக்குழைப்பதில் புத்திகெட்டுப் போகிறர்களைப் போல, ஆத்மலாபத்துக் குழைப்பவர்களிலும் அநேகர் புத்திகெட்டு தப்பு வழியில் பிரவேசித்து, தான் கற்ற வித்தையைத் தன் தாயிடம் காட்டும் துர்மதிகளைப்போல, ஆத்மாலாபத்துக்கென்று குருவை யடுத்தறிந்த பரமரகஸியங்களை ஸ்வயலாபத்துக் குபயோகித்து, முதலில் செழித்தோங்கி வாழ்வார்போல் வாழ்ந்து, அவர்கள் பெருவாழ்வெல்லாம் பேய்வாழ்வாகக் கடைசியில் மனநிலை குலைந்து கனதன மிழந்து தான் செய்த கர்மந் தன்னைத் தொடர அதை யனுபவிக்க ஆற்றாமல், நமன் வாய்ப்பட்டுக் கொடு நரகில் வீழ்ந்து படாத கஷ்டங்களெல்லாம் பட்டுப் பின்னர் ஒருவாறு தேறுகிறார்கள். எல்லா வழியும் முடிவில் ஒன்றையே நாடுவதாயினும், நல்வழி தீவழியிரண்டுக்குமுள்ள வித்தியாசம் இதுவே. "தான்முன்னஞ் செய்த விதிவழி தானல்லால் வான்முன்னஞ் செய்தங்கு வைத்ததோர் மாட்டில்லை" யென்பது திருமந்திரம்.

---

## "கள்ளனுக்குள்ளே குள்ளன்"

"தானே தனக்குப் பகைவனும் நட்டானும்"—திருமந்திரம்

இப்பொழுது பெங்காளத்தில் குண்டு வெடிகளும், யந்திரங்களும் செய்து, துரைத்தனம் தலைகவிழ்ந்து போகவேண்டுமென்று சில பெங்காள வாலிபர்கள் செய்த சூழ்வினையைப் போலீசார் உளவறிந்து கொண்டமையால், அவர்கள் செய்த யந்

திர தந்திரங்களெல்லாம் பலிக்காமற்போய் விட்டது. குண்டுவெடி செய்து வந்த இரகசியமான இடத்தை யறிந்துகொண்டு, இரகசியமாய் துரைத்தனத்தைக் கவிழ்க்க எண்ணங்கொண்டு வேலை செய்து வந்தவர்களென்று சமுசயத்துக்கிடமாயிருந்தவர்களில் 30 பேர்களைப் பிடித்துக் கொட்டடியிலடைத்து விசாரணைசெய்து வருகிறார்கள். விசாரணையாகி வருவதில் அநேகர் தாங்கள் துரைத்தனத்தைத் தலைகவிழ்க்கவென்றே சூழ்வினைசெய்துழைத்து வந்தார்களென்றும், அதற்காகக் குண்டுவெடியந்திரங்கள், துப்பாக்கிகள் முதலானது சேகரம் செய்து வைத்திருந்ததையும் அவர்கள் யத்தனம் பலிக்காமற்போனதால் நிரபராதிகளையெல்லாம் பிடித்து சர்க்கார் தண்டிக்காதிருக்கும்படி, அக்கிரமஞ்செய்தவர்கள் தாங்களே யுள்ளதுள்ளபடி சொல்லிவிடத் தீர்மானித்திருக்கிறார்களென்றும், அந்தத் தீர்மானத்திற் கிணங்கியே அவர்கள் தங்கள் சூழ்வினைகளையெல்லாம் உள்ளபடி வெளியிட்டு வருகிறதாகவும் சொன்னார்கள். கூவாலண்டோவில் மிஸ்டர் அல்லன் என்பவரை (இவர் கலெக்டர் உத்தியோகத்திலிருந்தவர்) சுட்டுவீழ்த்தியவரும், பெங்கால் உதவிக்கவர்னருடைய ஸ்பெஷல் ரயில்வண்டிபோகும் பொழுது அதைக் குண்டுவெடியால் நாசஞ்செய்துவிட யத்தனித்ததும் இன்னும் சில்லரையான அக்கிரமங்கள் செய்ததும், இராஜப்பிரதிநிதி, முக்கிய சேனாதிபதி, முதலியவர்கள் உயிரையும் வாங்க யத்தனம் செய்யவேண்டுமென்று சூழ்வினை செய்துவந்ததையும் ஆகிய எல்லாவற்றையும் வெளியிட்டுவருகிறார்கள். இவர்கள் சொல்வதெல்லாம் மெய்யோ பொய்யோவென்பது ஒருபக்கத்திலிருக்கட்டும். இவ்வளவு தீரமாகவும் தைரியமாகவும் துரைத்தனத்தையே தலை கவிழ்த்துவிடத் தீர்மானித்து அதற்கு வேண்டிய சூழ்வினைகள் செய்து வந்தவர்கள் தங்கள் "சாமர்த்தியமெல்லாம் சாதத்தில் கரைந்துபோக" இப்படி போலீஸார்கையில் அகப்பட்டுக்கொள்ள நேரிட்டதின் காரணத்தை நினைத்தால், "கள்ளனுக்குள்ளே குள்ளன்" என்கிற பழமொழியின் உண்மை விளங்குகிறது.

"கள்ளனுக்குள்ளே குள்ளன்" என்றால் என்ன? கள்ளன் என்பது யாரென்று சற்று அந்தர்முகத்திலிருந்து விசாரித்தால், வியவஹாரதுரந்தரனாயிருக்கும் பஹிர்முகமனமே "கள்ளன்" என்று ஏற்படும். ஏன் பஹிர்முகமனதைக் கள்ளனாகச் சொல்லல்வேண்டுமென்றால், செல்வத்துட் செல்வமாம் போதத்தை (அறிவை) க்களவிட்டுச்சென்று ஆத்மா அறிவழிந்தழலும்படி செய்வது பஹிர்முக மனதேயாம். தாயுமானவர் செய்த தேவிஸ்தோத்திரத்தில், "பூதமொடு பழகி வளர் இந்திரியமாம் பேய்கள், புந்திமுதலான பேய்கள் போராடு நோபாதி இராக்ஷஸப் பேய்களொன்—போதத்தை யூடழித்து வேதனை வளர்த்திவிடச்சதுர்வேத வஞ்சன் விதித்தான்" என்று சொல்லுகிறார். "சதுர்வேத வஞ்சன்" என்பது பிரம்மாவைச்சொன்னது. இந்தபிரம்மா அந்தக்கரண சதுஷ்டயமாயுள்ள (பஹிர்முக) வியவஹாரசமனத்துக்கு அதிஷ்டான தேவதையாம். இந்த அதிஷ்டான தேவதையை நொந்துகொண்டு, "இவ்வல்லலெல்லாம் வீழும் படிக்குனது மௌன மந்திராதிக்ய வித்தையை வியந்தருள் வையோ" என்று "நாதவடிவான மஹாமந்திராதிரூபி" யாயுள்ள தேவியைப் பார்த்துக் கேட்டுக்கொள்கிறார். "நான் பிராஞ்ஞன்"—"அறிவுருபுமாயிருக்கிறேன்" என்றறியும் அறிவே தேவியுபாஸகன். அப்படியறிந்துணர்ந்து அந்த நிலையில் வழுவாது நிற்றற்குரிய ஆற்றலே உபூரவலியரூபமாம்பராசக்தி, தேவனையடுத்து அவனிலும் வேறல்லாதவளாய் அபேதமாய் அத்வைதமாயிருத்தலால் அவளே தேவி. அறிவு மயங்கக்காரணமாயிருக்கும் பஹிர்முக (வியவஹார) மனம் கள்வனானல், அந்தக்கள்ளனுக்குள் அவன் செய்யும் செய்கைக்கெல்லாம் சாக்ஷிமாத்திரமாயிருக்கும் அறிவுண்டே அது "கூள்ளன்." எனதற்கு "குள்ளன்" என்று பேர் வரவேண்டுமென்றால் அந்த கூடஸ்தன் அங்குஷ்டப்பிரமாணமாய் இருத்தலாலே, அவனுக்கு "குள்ளன்" என்று பாமரபாஷையில் பேரிட்டார்கள். இந்தக்கூள்ளன் சாக்ஷிமாத்திரமாயிருத்தலினால், இவன் மனசு புத்தி யகங்காரம் இந்திரியங்களோடு கூடிய புருஷன் வியவஹாரதசையில் தன்னை மறந்து செய்யும் செய்கைகளை அவனுக்குள்ளிருந்தே பார்த்துவருகிறான். எல்லாரையும் ஏமாற்றும் கள்ளன் (வியவஹாரபுருஷன்) கூடஸ்தனாகிய இந்தக் குள்ளனை ஏமாற்றமுடியாமையால், அவன் (அந்த வியவஹார புருஷன்) "கள்ளனை நம்பினாலும் குள்ளனை நம்பக்கூடாது" என்று கூடஸ்தன் தன்னலம் பிறநலம் பாரா பேதபாவனையற்றவன் என்பதைத் தெரிவித்தான். இது வெறும்வாச்சா வேதாந்தமில்லை. காரியத்தில் தினந்தோறும் உபயோகப்பட்டு வரும் ஒரு முக்கியமான தத்துவ ரஹஸியம். வியவஹார தெசையிலுள்ள புருஷனே போகிபோக்கியாதி பொருள்களைத் தேடப் பிறர் பொருளை யபகரித்துத்தான் ஏகபோகமாக அனுபவிக்க நினைப்பான், வியவஹார

மற்று மனம் அந்தர்முகமாதத் திரும்பினல் எல்லா போகபோக்கியங்களும் தனக்குள்ளேயே அடக்கமாயிருக்கக் காண்கிறான். ஆகையால் அவன் தன்னைப் பரிபூரணனாகவுணர்ந்து அந்நிய வஸ்துக்களில் ஆசையைச் செலுத்துகிறதில்லை.

சாதாரணமாக எங்கேயாவது சொத்துக்களவு போனால், அதைக்கண்டுபிடிக்க ஒரு தந்திரம் செய்கிறதுண்டு. மந்திரவாதிகளையழைத்து மந்திர தந்திர யந்திரங்களால், தேவதைகளை யேவித் திருடியைப்பிடித்து விடுவதாக ஆர்ப்பாடம் செய்வதுண்டு. இதில் உண்மையான ஒரு தத்துவ இரகசியம் இருக்கிறது. இதை விட்டுப் பழிபாவத்துக்கஞ்சாது பொய்வேஷத்தால் பாதக மிழைப்பவர்களைப்பற்றி இப்பொழுது நமக்கு விசாரமில்லை.

ஒருவருக்குத் தான் நேசித்த ஒரு பொருள் ஞாபகத்துக்கு வந்தால் வாயில் ஜலம் ஊறி வழிகிறதுண்டு. இதைக் குழந்தைகளில் விசேஷமாய்க் காணலாம். சிறு பையன்களுக்கு வாயில் ஜலம் ஊறினால் "பெண்டாட்டியை நினைத்துக் கொண்டான், அதுதான் வாயில் ஜலம் ஊறுகிறது" என்று பெண்பெண்டாட்டிகள் சொல்லிப் பரிகாஸம் செய்வதுண்டு. இது போல தான் ஒரு ஆகாத காரியத்தைச் செய்து அதனால் பிராண பயம் நேரிடுமென்கிற எண்ணம் மனத்திலிருந்தால், அவ்வித பயம் உண்டாகுந்தோறும் வாயுலர்ந்து நாக்கில் ஜலம் ஊறுவது பட்டென்று இருந்திருந்தாப்போல் நின்று போம். அப்பொழுது எதையும் தின்னமுடியாது. இது விருப்பு வெறுப்பு அல்லது இராகத் துவேஷம் என்னும் தத்துவங்களாலுண்டாகும் ஒரு உண்மையான அறிகுறி. இதையறிந்த மந்திரவாதியென்ன செய்கிறானென்றால் திருட்டுப்போன விடத்தில் சமுசயத்திற்கிடமானவர்களையெல்லாம் வரவழைத்து தேவதையை ப்பூஜித்து ஏவுவதாக யந்திர தந்திரமந்திரங்களால் ஆர்ப்பாட்டஞ்செய்து, அதைப்பார்த்துக் கொண்டிருக்கிறவர்கள் மனச்சாக்ஷியைக் கிளப்பிவிட்டு, பிறகு பிரஸாதம் அளிப்பதாகச்சொல்லி, தேவதைக்கு நைவேத்தியமான மா அல்லது அரிசி இதை எல்லாருக்கும் கொடுக்கிறான். குற்றமுள்ள நெஞ்சு குறுகுறு என்னுமாதலால், குற்றஞ்செய்தவன் பிரஸாதத்தைக்கையில் வாங்கவும் அவன் மனச்சாக்ஷி அவனைச்சுட, நாவரண்டு வாயுலர்ந்து வாயில்போட்ட பண்டத்தை மென்னுதின்ன சக்தியற்றவனாகிறான். உடனே அவனைத் திருடனென்றுபிடித்துப் பல தந்திரங்களால், அவன்செய்த குற்றங்களை அவனிடமிருந்தே கண்டு கொள்கிறார்கள். இந்தியாவில் போலீஸார் குற்றவாளியைப்பிடிக்க இந்த சூக்ஷமத்தை யனுபவிப்பதுண்டு. குற்றவிசாரணை யிலாகாவிலும், உளவுவிசாரிக்கும் இலாகாவிலும், வேலையாயிருக்கும் போலீஸாருக்கு இந்த உளவுமர்மம்சாதாரணமாகத் தெரிந்துள்ளதே. இப்போது கல்கத்தாவில் துரைத்தனவைரிகள் செய்த சதிமோசமும் சூழ்வினையும் வெளியானதும் இந்த உளவுமர்மத்தினாலேயே. இதன் விவரத்தையெடுத்துச் சொல்வோம்.

---

## மொஸபர்பூர் குண்டுவெடிக்கொலை.

துரைத்தனத்தைத் தலைகவிழ்க்கவென்று இரகசியமாகச் சூழ்வினைசெய்துவந்த சில வாலிபர்கள் கல்கத்தா மாஜிஸ்திரேட்டாயிருந்து ராஜத்துரோகமென்று கொண்டுவந்த கேஸ்களிலெல்லாம் கடுந்தண்டனை விதித்துவந்த மிஸ்டர் கிங்ஸ்போர்டு மொஸபர்பூரில் டிஸ்திரிக்ட் அண்டு ஸெஷன்ஸ் ஜட்ஜி வேலைக்குயர்த்தப்பட்டு அங்கு போயிருந்தமையால், அவரைவெடிகுண்டு விபத்தில் சிக்கவைத்து மாளச்செய்ய வேண்டுமென்று இருவர் வெடிகுண்டு சகிதமாக அவ்வூருக்குச்சென்றார்கள். அங்கே போனவாலிபர்கள் மிஸ்டர் கிங்ஸ்போர்ட் வரவையெதிர்பார்த்து நின்றவர்கள், வெடிகுண்டை யெறியும் அவசர களேபரத்தில் மதிமயங்கியோ அல்லது குறிதப்பியோ ஒரு பாபமும் அறியாத இரண்டு வெள்ளைக்கார மாதுகள் உட்கார்ந்துவந்த வண்டியில் போட்டுவிட்டார்கள். வெடிகுண்டு வெடித்து அதிலுட்கார்ந்திருந்த தாயும் மகளுமான மிஸ்ஸஸ் கென்னடியும், மிஸ்கென்னடியும் உடனே மாண்டு போனார்கள். வெடிகுண்டுவிபத்துவிளைத்தவனான குடிராம்போஸ் என்னும் வாலிபன் உடனே மறைந்தோடி நாலுஸ்டேஷன்கள் தாண்டி ரயிலேறிக் கல்கத்தா போக யத்தனித்தான். ரயில் ஸ்டேஷனில் அவன் அமுதுண்டுகொண்டிருக்கையில் ரெயில்வே போலீஸைச் சேர்ந்த இரண்டு கான்ஸ்டேபில்கள் அவனையுற்றுப்பார்க்க நேரிட்டது. அந்தப்பார்வை அவன் மனச்சாக்ஷியைக் கிளப்பிவிட அது அவனுக்கு திடீரென்று பயத்தை யுண்டுபண்ணிற்று. உடனே வாயில் ஜலமூறுவது நின்று நாவுலர்ந்து போயிற்று. வாயில்போட்ட கவளத்தை மென்னு விழுங்க முடியாமல் தவித்தான். இவனுடைய நிலைமையைக் கண்டதும், இவன் ஏதோ அச்சப்பட்டுத்தவிக்கிறான் என்று உளவு மர்மமாயுணர்ந்துகொண்டு, இவனோடு விளையாட்டாக வார்த்தையாடத் தொடங்கினர்.

கள். அவர்கள் விளையாட்டாக வார்த்தையாடினது இவனுக்கு வினையாகத் தோன்றிற்று. இதை யுணர்ந்த கான்ஸ்டேபில்கள் உடனே இவன் மேல் லகபோட்டுப் பிடித்துக் கொண்டார்கள். பிடித் தவனைப் பல் விதத்திலும் பயமுறுத்தி நயபயமாய்க் கேட்கவே, அவன் மனச்சாக்ஷி (கள்ளனுக்குள்ளே யிருந்த குள்ளன்) அவனைக் காட்டிக்கொடுத்து விட்டது. அவனை மட்டுமென்று, அவன் இனத்தாரை யெல்லாம் காட்டிக் கொடுத்து விட்டது. இந்த வாலிபர்கள் தாங்கள் தெய்வானுக்ரகத்தினல் இந்தியாவைக் கொடுங்கோலினின்றும் விடுவிக்க யத்தனிப்பதாக நினைத்து வேலை செய்து வந்தார்கள். ஆனால் பழிக்குப் பழி வாங்க வேண்டு மென்கிற கெட்ட எண்ணத்தினல் தூண்டப்பட்டவர்களானபடியால், "தானொன்று நினைக்க தெய்வமொன்று நினைத்தது" கண்டு மதிமயங்கி கலங்கிப் போனர்கள். அவர்கள் பிள்ளையார் பிடிக்கப் போய் அது குரங்காக முடிந்ததைக் கண்டதும், அவர்கள் மனமுடைந்து மயகிப் போய்விட்டார்கள். தெய்வகிருபை தங்களிடத்தில் இல்லையென்று தோன்றினதும், நாம் அழியவேண்டியதுதான், அழிந்து போவோமென்று துணிந்து உண்மையைச் சொல்வதாக எல்லாவற்றையும் சொல்லிவிட்டார்கள். இப்படி மனப்பால் குடித்து மதமேறி மத்தித்தவர்கள் உண்மையைச் சொல்வ தென்றால் என்ன? அவர்கள் மனதுக்கு எது உளதாகத் தோன்றுகிறதோ அதுவே அவர்களுக்கு உண்மை! இந்த உண்மை இன்றைக்கு மெய்யாக விருந்து நாளைக்குப் பொய்யாகிவிடும். தேசாபிமானப் பித்தேற இக்கொடுமை செய்யத் துணிந்த இவர்கள் புன்மதிக் கிரங்குவதோ! இவர்களைக் கொண்டு துரைத்தனத்தைத் தலைகவிழ்க்கக் கருதித் தாம் மறைவிலிருந்துக்கொண்டு இவர்களை இவ்வித ஆபத்து காரியத்தில் ஏவிப் பயங்கொள்ளிப் பித்தர்கள் பாதகத்துக் கிரங்குவதோ! இக் கொடுமைக்கு இறையாய் இவர்களுடைய பாதகத்துக் கிலக்காய் விழுந்து மடிந்த நிரபராதிகளான ஜீவன்களுக்கு இரங்குவதோ! இதையெல்லாம் விட்டு ஜனங்களுடைய மனநிலையுணரச் சக்தியின்றி ஆடு மாடுகளை மேய்த்துக் கட்டுவது போல, இந்தியாவிலுள்ள ஜனங்களத்தனை பேரையும் ஆடுமாடுகளாக வெண்ணி அவர்களுடைய விருப்பு வெறுப்புக்கள் எப்படியாயினும் ஆகுக; நாங்கள் வைத்ததே சட்டமென்று, சங்கல்பசக்தியுள்ள மனிதனை அச்சக்தியில்லா மிருகங்கள்போல் ஆளக் கங்கணங்கட்டி முறட்டுத்தனமாய் ஜனங்கள் மனதை யடக்க முயலும் மிஸ்டர்மார்லி (இப்பொழுது லார்ட் மார்லியாய் விட்டார்) போன்ற மந்திரிகளின் மதியூக தந்திரத்தைக்கண்டு இரங்குவதோ? எதும் தெரியவில்லை! "விதைத்தார் வினையறுப்பார்," "பதைத்தார் பழி சுமப்பார்." என்பது அர்த்தபுஷ்டி நிறைந்த அனுபவவாக்கு. அவ்வளவு தான் நாம் இங்கே சொல்லலாம்.

---

பஞ்சதசிஸ்தவத்தில் இரண்டுபாட்டு இங்கே ஞாபகத்திற்கு வருகிறது. தேவியின் உரு "அறிவுரு" வானதால், 15-கலைகளோடு கூடிய அந்த அறிவைத் தொழுது துதிக்கையில் சொன்ன வார்த்தைகளை அறிவாலே யறிந்துகொள்ள வேண்டுமென்றி, தேஹமனேந்திரியங்களால் வியவஹாரதெசையிலிருந்துணர்ந்தால் அதன் உண்மை உணரமுடியாது. ஆகையால் அறிஞர் அறிவால் இதை அறிந்துகொள்ளவேண்டும்.

"பார்ப்பினிவேடம் புனைந்து பின்னென்னையாண்டு
வேர்ப்பிணி தீர்ந்திட வினைதீர்க்கும்வழிகாட்டி
ஆர்ப்பாடஞ்செய்தவள் ஆர்வமுநிறைவித்து
ஊர்ப்பாடுபட்டுநீ யுண்மையுண ரென்றாள்"* [டு

"உணரென்றுசொன்னமேதோர் சொல்லைமேற்கொண்
கணமும்இடைவிடாதென்னுள் அவளையே உன்னி
ருணமெல்லாந்தீரவல் வினையதுபோக்கிநான்
குணமென்னுங்குன்றேறியவளையே தொழுதனன்." [ணர்

"தொழுதுநான்தேடியதேடரும்பொருள்தனையுள்ளு
பொழுதென்னுள்ளுறைநள்வன்கவர்வனென்றஞ்சி
யழுதுன்னுள்வைத்தேநானுர்வமுநிறைந்தேன்
பழுதுவாராமல் நீ பாதுகாத்தருளினை."

எதற்கும், "அறிவுரு"வாயுள்ள அம்பாளைநம்பினல் அவள் "பழுதுவாராமல் பாதுகாத்தருளுவள்." இதுநிச்சயம், நிச்சயம், நிச்சயம்! ஓம்.

---